E-ISSN: 2581-7140

# தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்




# INTERNATIONAL JOURNAL OF TAMIL LANGUAGE AND LITERARY STUDIES

(Ijtlls)

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

VOL – I: ISSUE – I, JULY 2018

# பொருளடக்கம்

# வாழ்த்துரை

தைவடடள எனும் பன்னாட்டு தமிழ் இதழை இனிதே தொடங்கி நடத்துவதில் மிகவும் பெருமையடைகிறோம். தமிழ் மொழி மற்றும் இலக்கியத்தின் தொன்மையினை வெளிகொணரும் வகையில் இவ்ஆய்விதழ் அமைந்துள்ளது. தமிழ் ஆய்வாளர்கள், பேராளர்கள் மற்றும் ஆர்வலர்கள் தங்கள் ஆய்வை இயற்றி ஒப்புமை மற்றும் உயர்வு பெற இது ஓர் அரிய களமாகும். இது இப்பன்னாட்டு இதழின் முதல் வெளியீடாகும். *என் பணி தமிழ் பணி செய்து கிடப்பதுவே* என்பதற்கிணங்க ஆராய்ச்சி மாணவர்கள் மற்றும் பேராளர்களால் சிறந்த ஆய்வு கட்டுரைகள் வழங்கப்பட்டு இவ்விதழ் வளம் பெற்றுள்ளது. இவ்விதழின் சிறப்பு இருமொழிகளில் (தமிழ் மற்றும் ஆங்கிலம்) ஆய்வு கட்டுரைகளைக் கொண்டிருப்பதாகும். தமிழ் வளர்ச்சிக்காக அதன் தொன்மையை உலக அரங்கிற்கு எடுத்துச் செல்வதே இவ்ஆய்விதழின் நோக்கமாகக் கொண்டாளப்பட்டுள்ளது. மேன்மேலும் இப்பன்னாட்டு இதழ் வளர்ச்சியடைய அனைவரின் சிறந்த ஆய்வு கட்டுரைகள் வரவேற்கப்படுகின்றன.

- பதிப்புக்குழு


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



# சங்க இலக்கியங்களில் பண்பாட்டு மரபுகள்

**சு. அய்யனார்,**
**முனைவர் பட்ட ஆய்வாளர்,**
**தமிழாய்வுத்துறை.**
**பிஷப் ஹீபர் கல்லூரி,**
**திருச்சி – 17.**

தமிழ் இலக்கிய வரலாற்றிலும், தமிழ்ச் சமூக வரலாற்றிலும் சங்ககாலம் பொற்காலமாகக் கருதப்படுகிறது. மக்களை விலங்குகளின்று வேறுபடுத்திக் காட்டுவதும் அவர்தம் பண்பாட்டுக் கூறுகளேயாகும் உயரிய பண்பாடுகள் உலகம் முழுவதற்கும் பொதுவானதாகும். மக்கள் தம் பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், நீதிநெறி முறைகள், வழிபாட்டு நெறிகள் முதலானவற்றில் அவர்தம் பண்பாடு வெளிப்படுவதை காணலாம். இக்கட்டுரையில் சங்ககால மக்களின் பண்பாட்டு மரபுகளை வெளிப்படுத்தும் சங்க இலக்கியங்களில் பண்பாட்டு மரபுகள் குறித்து ஆராயப்படுகிறது.

**பண்பாடு**

*பண்புடையார்ப் பட்டுண்டு உலகம் அது இன்றேல்*
*மண்புக்கு மாய்வது மண்*[1]

எனும் குறளுக்கு உயிரோவியம் தந்து பண்பாட்டின் தாயகமாய்த் திகழ்ந்த சங்க காலம் ஒரு பொற்காலம். ‘பண்படு’ என்ற சொல்லில் இருந்து உருவானது ‘பண்பாடு’. *பண்பாடு என்பது அனைவராலும் பகிர்ந்து கொள்ளப்பட்ட கருத்துக்களும், சமுதாய மரபுரிமையாகப் பெறப்பட்ட நம்பிக்கைகளும், பழக்கவழக்கங்களும் அடங்கிய தொகுப்பாகும்*[2]

மனிதன் தனது சுற்றுச் சுழலைக் தனக்கேற்ப மாற்றித் திருத்தி தனது புற வாழ்வியலை ஒழுங்குபடுத்தித் திட்டமிட்டுச் செயல்படும் கூறுகள், வாழ்க்கை பற்றிய நம்பிக்கைகள், சடங்குகள் மதிப்புகள், சமூகக் கருத்துக்கள் அடங்கிய கூறுகள் பண்பாடு எனப்படும்.

*உறுப்புஒத்தல் மக்கள்ஒப்பு அன்றால் வெறுத்தக்க*
*பண்புஒத்தல் ஒப்பதாம் ஒப்பு* [3]

அகத்தில் அறிவென்ற விதை விதைத்துப் பண்பாட்டுப் பயிரை வளரச் செய்யும் பண்பாடு உடையவர். அறிவு வளர்ச்சியைக் காட்டிலும் உடல் வளர்ச்சியைக் காட்டிலும் பண்பாட்டு வளர்ச்சியே மேன்மையாகக் கருதப்படுகின்றது.

**அன்பு எனும் பண்பு**

*அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை*
*பண்பும் பயனும் அது* [4]

காதலில் கலந்து இல்லறத்தில் இணைந்த இருவரும் ஒருவரை ஒருவர் விட்டுக் கொடுக்காது புகழ்வதும், அன்பின் மகிமையைப் புலப்படுத்தும் பண்பும் பாங்குடையதாகும்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



*நீரின்றியமையா உலகம் போலத்*

*தம்மின்றமையாத நந் நயந்தருள்* [5]

எண்ணிய வினைமுடித்துத் தலைவன் இனிதே திரும்ப அன்போடு அவனை நினைத்து விளக்கேற்றி வழிபடும் பண்பாட்டு வழக்கமும், இல்லில் இருந்து தலைவனை நினைக்கும் தலைவியின் அன்பும் காட்டப்பட்டுள்ளது.

மனம் ஒத்த அன்பே இல்வாழ்வின் தலையாய பண்பு என்று கருதப்படுகின்றது. அதற்கேற்றவாறு உயிர் கலந்து ஒன்றிய பழமையான நட்புடனும் குற்றமற்ற அன்பினால் ஒன்றுபட்ட உள்ளமுடனும் தலைவனும் தலைவியும் வாழ்ந்தனர். தலைவனும் தலைவியும் உடலும் உயிரும் போலத் திகழ்ந்த அன்பினை,

*யாக்கைக்கு உயிரியைந் தன்ன நட்பின் அவ்வுயிர்*

*வாழ்தல் அன்ன காதல்*

*சாதல் அன்ன பிரிவறு யோளே* [6]

என்று அகநானூறு அன்பின் தொன்மையைக் காட்டுகின்றது.

**விருந்தோம்பல்**

*இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி*

*வேளாண்மை செய்தற் பொருட்டு* [7]

பண்டைத் தமிழரின் தலையாய பண்பாட்டு மரபுகளுள் சிறந்தது விருந்தோம்பலாகும். அனிச்ச மலரிலும் மென்மையான விருந்தினரின் முகம் கோணாது அமிழ்தத்தைவிட மேலான உணவை, நாடிவந்த விருந்தினற்கு இரவு நேரமாயினும் இன்முகத்துடன் படைத்தளித்தனர்.

*அல்லில் ஆயினும் விருந்துவரின் உவக்கும்*

*முல்லை சான்ற கற்பின்*

*மெல்லியற் குறுமகள் உறைவின் ஊரே* [8]

சங்ககால இல்லற மகளிரின் இன்றியமையாப் பண்புகளுள் ஒன்று விருந்தோம்பல். தொல்காப்பியர் இல்லறத் தலைவியின் கடமைகளைக் கூறும் போது விருந்தோம்பல் எனும் பண்பாட்டு மரபை விளக்கும் விதமாக, '*விருந்து புறந்தருதலும் சுற்றம் ஓம்பலும்*' [9]என்று கூறியுள்ளார். கணவன் மனைவியாடையே எழும் ஊடலைத் தீர்க்க வாயில்களாக விருந்தினர் அமைவர். சங்க இலக்கியம் இல்லறத்தின் இன்றியமையா அறமாக விருந்தோம்பலை வலியுறுத்துகின்றது. விருவிருந்தோம்பி தன் மனைவி விரும்புமாறு அவளுடன் கூடியிருத்தலே வாழ்க்கையின் உண்மையான பண்பாடாக தமிழர்கள் கருதினர்.

*தவச்சிறி தாயினும் மிகப்பல ரென்னாள்*

*நீனெடும் பந்த ரூண்முறை யூட்டும்*

*இற்பொலி மகடூஉ* [10]

இரவு நேரத்தில் விருந்தினர் எவராவது உண்டா என்று பார்த்து வாயிற்கதவை


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018 Available at: www.ijtlls.com



அடைப்பதைப் பண்டைத் தமிழர் வழக்கமாகக் கொண்டு இருந்தனர். இவ்வாறு சங்கத் தமிழ் மக்களின் விருந்தோம்பல் சிறப்பு போற்றத்தக்க வகையில் அமைந்துள்ளது.

**ஈகை**

அறம் என்பதற்கு ‘ஈகை’ என்று பொருள் கொள்ளுமாறு ஈகை அறத்தினை சங்க இலக்கியம் போற்றியுரைக்கின்றது. முற்காலத்தில் தானத்தில் சிறந்தது அன்னதானமாக இருந்தது. தானத்தை ஈகை, கொடை என்ற சொல்லில் வழங்கி வருகின்றனர். மணிமேகலையில் ஈகைப் பண்பின் மேன்மையை,

*மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க்கெல்லாம்*
*உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத்தோரே* [11]

என்ற பாடல் எடுத்தியம்புகிறது. தனிமனித வாழ்வில் இரத்தல் இழிவாகக் கருதப் பெறினும் சமூக வாழ்வில் ஈகை உயர்ந்த அறமாகக் கருதப்பட்டது. இந்நிலவுலகில் எல்லோரும் எல்லாம் பெற வேண்டும் என்ற உயர்ந்த நோக்கம் தமிழர்களிடையே இருந்துள்ளது. எவ்விதப் பயனும் கருதாது ஒருவர்க்கு ஒரு பொருளை அளித்தலே ஈகை எனப்படும். ஒருவருடைய குறிப்பறிந்து அவரின் தேவைகளை அறிந்து அவர்களுக்கு வேண்டுவன அளித்து உதவுதலே ஈகையாகும்.

*வறியார்க்கொன் றீவதே ஈகைமற் றெல்லாம்*
*குறியெதிர்ப்பை நீர துடைத்து* [12]

பண்டைத் தமிழர் பயன் நோக்காது பிறர் வறுமையைப் போக்குதலைக் கடமையாகக் கொண்டு ஈகை என்னும் அறமரபினைச் செய்தனர். இவ்வாறு செய்வதால் தாங்கள் செய்த பாவங்கள் தம்டை விட்டு அகலும் என்றும் மேலும், இவ்வாறு செய்தால் மறுபிறவியில் இல்லறம் தம்மைக் காக்கும் என்றும் மக்கள் திர்க்கமாகக் கருதினர்.

*இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்*
*அறவிலை வணிக னாயலென் பிறரும்*
*சான்றோர் சென்ற நெறியென*
*ஆங்குப் பட்டன் றவன்கை வண்மையே* [13]

என்று புறநானூறு ஈகைப் பண்பைப் போற்றுகின்றது.

**ஒழுக்கம்**

ஒழுக்கமுடைய வாழ்வே உயர்ந்த வாழ்வு என்பது பண்டைத் தமிழரின் கொள்கையாகும். அறிவும் ஒழுக்கமும் உடைய சான்றோர்களின் ஒழுகலாறுகளை முன் மாதிரியாகக் கொண்டு வாழ்தவே மனிதனுக்குரிய கடமையாகும். ஒழுக்கம் உடைய உயர்ந்தோரை எடுத்துக்காட்டாகக் கொண்டு அவர் கூறும் மெய்நெறியைப் பின்பற்றி வாழ்தல் வேண்டும். ஒழுக்கம் மேன்மையையும் இன்பத்தையும் நல்கவல்லது. நல்லொழுக்கம் நன்மைக்கு வித்தாக அமையும்; தீயொழுக்கம் பழியையும், துன்பத்தையும் தரும்.

*ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்*



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



*உயிரினும் ஓம்பப் படும்*[14]

என்றார் வள்ளுவர். நல்லொழுக்கமுடைய மக்கள் தவறியும் வாயினால் தீய சொற்களைக் கூறமாட்டார்கள். தீய செயல்களைப் புரிய மாட்டார்கள். நல்லொழுக்கம் என்பது உயர்ந்தோர் ஒழுகும் நெறியாகும்.

*முத்தினும் மணியினும் பொன்னினு மத்துணை*
*நேர்வருங் குரைய கலம் கெடின் புணரும்*
*சால்பும் வியப்பும் இயல்புங் குன்றின்*
*மாசறக் கழீஇ வயங்குபுகழ் நிறுத்தல்*
*ஆசறு காட்சி ஐயர்க்கும் அந்நிலை*
*எளிய வென்னார் தொல்மருங் கறிஞர்* [15]

மணி, பொன், முத்து இவற்றாலாய அணிகலன்கள் பழுதடைந்தால் சரி செய்து கொள்ளலாம். ஆனால், சால்பு, வியப்பு, பெருமை, ஆகிய பண்புகள் குன்றினால் அவற்றை சரி செய்து தன் நிலைக்கு புகழை நிலை நிறுத்தல் அறிவுடைய சான்றோர்க்கு எளிதன்று. உலகத்தோடு ஒட்ட ஒழுகுதலே சான்றோர் நெறியாகும். அந்நெறியில் ஒழுகுதலே நல்லொழுக்கமும் ஆகும். அதுவே பண்பட்ட வாழ்வியல் நெறியாகும். இவ்வாழ்வியல் அறங்கள் தமிழர்களின் வாழ்க்கையில் இரண்டறக் கலந்ததாலே ஒழுக்கத்தை உயிருக்கு இணையாகக் கருதினார்கள் சங்ககால முன்னோர்கள் என்று குறிஞ்சிப்பாட்டு பாடல் வரிகள் இயம்புகின்றன.

**மனித நேயம்**

மனித நேயம் உலகளாவியது. உலகை ஏற்றுக் கொள்வது; அரவணைப்பது; அக்கறை காட்டுவது சான்றோரின் கடமையாகும். மனித நேயம் ஒருவரையொருவர் மாண்புடன் மதித்திட உதவுகிறது. மனத்தின் வழி இயங்குவன் மனிதன், மனிதனை மனிதனாக நிலை நிறுத்துவது மனம். ஆதனை வெளிப்படுத்தும் விதமாக,

*மனநலம் மன்னுயிர்க்கு ஆக்கம் இறைலம்*
*எல்லாப் புகழும் தரும்* [16]

இக்குறள் அமைந்துள்ளது. இங்கு தனிமனித இனத்தைக் கூறுவதன் வழியாக வள்ளுவர் அவன் இனத்தையும் கூறுகிறார். மனித நேயம் என்பது நாடு, மொழி, இனம், மதம் என்ற எல்லைகளைக் கடந்து மேலோங்கி நிற்பது. மனித இனத்தின் நாகரிகப் பண்பாட்டு வளர்ச்சியோடு பிணைந்து நிற்பது மனித நேயம் ஆகும்.

அன்பு இயற்கையான உணர்வாக மக்கள் அனைவரிடத்திலும் இயல்பாக அமைந்திருக்கிறது. நெருங்கிய சுற்றத்துடன் நாம் கொள்ளும் அன்பு வளர்ந்து அவர்களைச் சார்ந்தோரையும் நமக்குச் சுற்றம் ஆக்குகிறது. மனிதநேயத்தைப் பற்றி இயம்பும்பொழுது,

*நின்னயந் துறைநர்க்கு நீநயத் துறைநர்க்கும்*
*பன்மாண் கற்பினின் கிளை முத லோர்க்கும்.*
*.... வல்லாங்கு வாழ்து மென்னாது நீயும்*



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



*எல்லோர்க்கும் கொடுமதி மனைகிழ வோயே* [17]

என்ற புறநானூற்றுப் பாடலும் சங்க கால மக்களின் மனித நேயப் பண்பினைப் புலப்படுத்துகிறது.

**முடிவுரை**

மறந்தும் பிறன் கேடு சூழற்க என்ற பண்பாடே வையத்தை வாழ வைப்பதாகும். இலக்கியங்களில் காணப்படும் தமிழரின் பண்பாட்டு மரபுகளை நாமும் கற்பதோடு மட்டுமின்றி வரும் தலைமுறையினருக்கும் நமது பண்பாட்டை எடுத்துரைக்க வேண்டும். நம் முன்னோர்களின் வாழ்க்கை நெறிகளையும் பண்பாட்டு மரபுகளையும் காத்திட வேண்டும்.

**அடிகுறிப்புகள்**

1. குறள் - 996.
2. பண்பாட்டு மானிடவியல் - பக்தவத்சல பாரதி, ப-151
3. குறள் - 993
4. மேலது - 45
5. நற், பா -1, வரி -6
6. அகம் - பா.339
7. குறள் - 81
8. நற், பா -142
9. தொல்.கற் -11
10. புறம், பா -331
11. மணி, பாத்திரம்.பெ.காதை - வரி 95,96
12. குறள் - 221
13. புறம், பா -134
14. குறள் - 131
15. குறிஞ்சி, வரி 13-18
16. குறள் -457
17. புறம், பா -163

**துணைநூற்பட்டியல்**

1. வ.சுப. மாணிக்கம் (உ.ஆ) - திருக்குறள், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, மறுபதிப்பு-2000.
2. இளம்பூரணர், (உ.ஆ) - தொல்காப்பியம் பொருளதிகாரம், கழக வெளியீடு, சென்னை, முதல்பதிப்பு - 1970.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



3. ஔவை சு. துரைச்சாமிப்பிள்ளை, முனைவர்.கதிர்முருகு - சங்க இலக்கியம் மூலமும் உரையும், பத்துப்பாட்டு, சாரதா பதிப்பகம், சென்னை - 600014.

4. ஔவை சு. துரைச்சாமிப்பிள்ளை, முனைவர்.கதிர்முருகு - சங்க இலக்கியம் மூலமும் உரையும், அகநானூறு, சாரதா பதிப்பகம், சென்னை - 600014.

5. ஔவை சு. துரைச்சாமிப்பிள்ளை, முனைவர்.கதிர்முருகு - சங்க இலக்கியம் மூலமும் உரையும், நற்றிணை, சாரதா பதிப்பகம், சென்னை - 600014.

6. உ.வே. சாமிநாதையர் - புறநானூறு மூலமும் உரையும், உ.வே.சா.பதிப்பு, சென்னை, ஆறாம் பதிப்பு - 1963.


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



# சிந்துப் பாடல்களில் யாப்பிலக்கணம்

**திருமதி. ஜெ.கவிதா,**
**உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,**
**பூசாகோஅரகிருஷ்ணம்மாள் மகளிர் கல்லூரி,**
**கோவை - 641004.**

நாட்டுப்புறப் பாடல்களிலும், நாட்டுப்புறப் பாடல்களின் தாக்கம் பெற்ற இலக்கியங்களிலும் சிந்துப்பாடல்கள் சிறப்பிடம் பெறுகின்றன. தொன்மையும், மக்களிசைப் பாங்கும் தழுவிய சிந்துப்பாக்கள் எறத்தாழ அப்பர் காலத்திலும் உருப்பெறத் தொடங்கி இலக்கியங்களிலும், நாட்டுப்புறப் பாடல்களிலும் வளர்ச்சி அடைந்து 18-ம் நூற்றாண்டு முதல் மிகுதியாக இயற்றப்பட்டுத் தற்காலத் தமிழ்ப் பாட்டிலக்கியத்தில் தக்கதோர் இடத்தைப் பெற்றுள்ளன. எனினும் தாளமுடைய சிந்துப்பா வடிவ அமைப்பை முதன்முதலாக எடுத்துக் கூறுபவர் வீரமாமுனிவர் ஆவார். புலவர் குழந்தை இக்கால வளர்ச்சி வடிவங்கள் பலவற்றுக்கும் இலக்கணம் வகுத்துள்ளார். சிந்துப்பாடல்கள் இசைத் தமிழ்பாடலாகும். இவற்றின் இலக்கணம் இசைநூல் அடிப்படையில் ஆராயப்பட வேண்டிய ஒன்றாகும். மேற்குறித்தோர் இயற்பாக்களுக்கு உரிய மா, விளம், காய், கனி முதலிய சீர் வாய்ப் பாடுகளையும், வெண்டளை முதலிய தளைகளையும் சிந்துகளின் சீர்களை விளக்க அடிப்படை அளவு கோல்களாகப் பயன்படுத்தி உள்ளனர். இவ்வடிப்படை அணுகுமுறையின் காரணமாகச் சிந்துப்பாவில் யாப்பிலக்கணத்தைக் கூறுவதில் ஒரு சில இலக்கண நூல்களும் விளக்கம் தந்துள்ளன. சிந்து என்ற சொல்லின் தொன்மையை அறிய தொல்காப்பிய காலத்துக்கு முன்பே தமிழில் இருந்திருக்கிறது. ஏழு, எட்டு, ஒன்பது எழுத்துக்கள் அமைந்த நாற்சீர் அடிகளைச் சிந்தடி என்பார்கள் என்று தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார்.

*ஏழெழுத் தென்ப சிந்தடிக் களவே*
*ஈரெழுத் தேற்றம் அவ்வழி யான்* [1]

மேலும் காக்கைபாடினியார். அமிர்தசாகரர் முதலாகியோர் முச்சீரடியைச் சிந்தடி என்றும், மூன்றடி வெண்பாவைச் சிந்தியல் வெண்பா என்று செப்பினர்.

*இருசீர் குறளடி சிந்தடி முச்சீர்*
*அளவடி நாற்சீ, அறுசீ ரதனின்*
*இழிப நெடிலடி என்றிசி னோரே* [2]

என மேற்கண்ட பாடல்வரிகள் மூலம், தொல்காப்பியர் காக்கைப்பாடினியர், அமிர்தசாகர் போன்ற இலக்கண நூலாசிரியர்கள் சிந்துப்பாவிற்கான இலக்கணத்தை வரையறுத்து கூறுகின்றனர். இவ்வாறு சிந்துப்பாவிற்கான இலக்கண விளக்கத்தை கீழ்கண்ட மொழிகளாலும் சொற்களாலும் இக்கட்டுரையின் மூலம் அறியலாம்.

**சிந்துப்பாடல் விளக்கம்**

காவடிச்சிந்து, நொண்டிச் சிந்து, வளையற் சிந்து, வழிநடைச் சிந்து முதலிய



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018 
Available at: www.ijtlls.com

பெயர்களில் இசைப்பாடல்கள் பல உள்ளன. சந்தப்பாடல்கள் (சந்தவிருத்தங்கள்) வண்ணப்பாடல்கள் (திருப்புகழ்ப்பாடல்கள்), உருப்படிகள் (கீர்த்தனைகள்) என்ற பெயர்களில் இசைப்பாடல்கள் இருக்கின்றன. இவ்வகையான சிந்துப்பாடல்களுக்கு இலக்கணம் கூறியவர்கள் புத்தமித்திரனார், அறிவனார், வீரமாமுனிவர், புலவர் குழந்தை, கி.பா. ஜகநாதன், த. சரவணத் தமிழன், ம.ரா. பூபதி முதலியோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

**புத்தமிதரனார்**

புத்தமித்திரனார் தம் வீர சோழியத்தில்

*இரண்டடி ஒத்து அழிசீர் இலாதது சிந்தாம்* [3]
*வீசின பம்பரம் ஓய்வதன் முன்நான்*
*ஆசை அறவினை யாடித் திரிவனே*
*எடுத்த மாடம் இடிவதன் முன்நான்*
*அடுத்த வண்ணம் விளையாடித் திரிவனே* [4]

மேற்கண்ட இரண்டு பாடல் வரிகளைக்காட்டி, இவை இரண்டடியாயத் தம்முள்ள அளவொத்து வந்தமையால் சிந்து என்கிறார் புத்தமித்தரனார்.

**அறிவனார்**

அறிவனார் தாம் இயற்றிய பஞ்ச மரபில் இசைப்பாக்களின் பெயர்களைப் பின்வருமாறு கூறுகின்றார்.

*பண்ணுமியாழ் வண்ணம் பாடடச் சிந்தொன்றார்*
*எண்ணத்தான் மிக்காய்ந்தோர் என்* [5]

என்ற வரிகளில் சிந்துப் பாடல்களானது தாளத்துடன் பாடப்படுவது என்ற இயல்பை சுட்டிக்காட்டுகிறார் அறிவனார்.

**வீரமாமுனிவர்**

18-ம் நூற்றாண்டினரான வீரமாமுனிவர் அத்தகைய சிந்துகளின் அமைப்பினைத் தம் ‘செந்தமிழ் இலக்கணம் என்ற நூலில் பின்வருமாறு கூறுகிறார். சிந்துப் பாடலில், 4 கண்ணிகள் உண்டு, அவற்றுள் முதலாவது ‘பல்லவம்’ என்னும் குறுகிய வரியாகும். அது மற்ற ஒவ்வொரு கண்ணிக்கு முன்னும் திருப்பிப் பாடப்பெறும் நான்கு கண்ணிகளில் முதலாவது இறுதியானவற்றைவிடக் குறுகியதாகும். எனவே இதனை ‘அநுபல்லவம்’ என்று பெயர் பெற்றுயிருக்கும். மற்றக் கண்ணிகள் மூன்றும் எல்லா வகையிலும் தம்முள் ஒத்திருக்கும், இவற்றில் எதுகையுடன், இறுதி ஒலி ஒத்துவரும் இயைபும் பயன்படுத்தப் பெறுகின்றது. இவர் சிந்துவில் எடுப்பு, தொடுப்பு தொடைப் பற்றியும் கூறியுள்ளார்.

**இவர் கூறிய சில உண்மைகள் கீழ்கண்ட விளக்கத்துடன் உறுதியாகின்றன.**

1. பல்லவி, அநுபல்லவி, சரணம் ஆகிய உறுப்புகளுடன் இன்று காணப்படுவன சிந்துப்பாக்களே.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



2. பல்லவி, அநுபல்லவி இரண்டும் ஒரு கண்ணியின் இருபகுதிகளே.
3. பல்லவம், அநுபல்லவம் என்பன இன்று பல்லவி, அநுபல்லவி என்று மாறி வழங்குகின்றன. இவ்வாறு மேற்கண்ட வரிகள் மூலம் வீரமாமுனிவா் கூறியுள்ள சிந்துப்பா செய்திகளைச் ஆராயும் போது, தற்போது சூழலில் உள்ள திரையிசைப் பாடலுக்கு முன்னோடியாக சிந்துப்பாவை அமைத்துள்ளாா்கள் என்பதை நாம் அறிந்துக் கொள்ள முடிகிறது.

**புலவா் குழந்தை**

இவா் தம் யாப்பதிகாரம் என்ற நூலில் சிந்துப் பாடல்களுக்கு விரிவான இலக்கணம் கூறியுள்ளாா்.

*ஒரெதுகை பெற்ற இரண்டடிகள் அளவொத்து வருதல் (யாப்பதிகாரம் - புலவா் குழந்தை)* சிந்து எனப்படும். இரண்டேயன்றி நான்கடிகள் ஓரெதுகையாய் வருதலும் உண்டு. ஓரடியின் மோனைத் தொடை எடுப்பின் முன்னும் பின்னும் உள்ள அரையடி இங்கு அடியனவே வழங்கப்பெறும். இதையே கவிமணியின் மலரும் மாலை என்ற நூலில் சிந்துவின் இலக்கணத்தை உற்று நோக்கலாம்.

*பூவும் வேண்டாமே - பழமும்*
*பொரியும் வேண்டாமே*
*மேவு முள்ளன்பே – தேவி*
*விரும்பும் நல்லமுதாம்*

இச்சிந்தில்,

*பூவும் வேண்டாமே - குறளடி*
*பொரியும் வேண்டாமே - குறளடி*
*பழமும் - தனிச்சொல்*

மோனைத் தொடை எடுப்பின் முன்னும் பின்னும் உள்ள அடிகள் ஒத்து வருதல் சமனிலைச் சிந்து எனவும் ஒவ்வாது வருதல் வியனிலைச் சிந்து எனவும் பெயா் பெறும்.

*'பூவும் வேண்டாமே பொரியும் வேண்டாமே'*என்றும் இரண்டும் குறளடியாக வந்தால் இது சமனிலைச் சிந்து.

*பக்தியினாலே - இந்தப்*
*பாரினி லெய்திடு மேன்மைகள் கேளடி*

முதலடி குறளடியாகவும், அடுத்த அடி அளவடியாகவும் வந்தால் அது வியனிலைச் சிந்தாகும்.

**சமனிலைச் சிந்து**

1. குறளடி இரண்டு வருதல் - இருசீரிரட்டை
2. சிந்தடி இரண்டு வருதல் - மூச்சீரிரட்டை
3. அளவடி இரண்டு வருதல் - நாற்சீரிரட்டை
4. நெடிலடி இரண்டு வருதல் - ஐஞ்சீரிரட்டை



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



5. கழிநெடிலடி இரண்டு வருதல் - அறுசீரிரட்டை

எழு சீரிரட்டை எண்சீரிரட்டை என அவ்வச்சீர்கள் அசையாகப் பெயர் பெறும் என்கிறார் புலவர் குழந்தை.

**வியனிலைச் சிந்து**

1. குறளடியும் சிந்தடியும் வருதல் - இருமூச்சீரிரட்டை
2. குறளடியும் அளவடியும் வருதல் - இருநாற்சீரிரட்டை
3. சிந்தனையும் அளவடியும் வருதல் - முந்நாற்சீரிட்டை
4. சிந்தடியும் குறளடியும் வருதல் - முவ்விருசீரிரட்டை
5. அளவடியும் குறளடியும் வருதல் - நாலிருசீரரட்டை
6. அளவடியும் சிந்தடியும் வருதல் - நாமுச்சீரிரட்டை

எனப் பெயர் பெறும், இவ்வாறே பிறவும் பெயர் பெறும் இவை ஒவ்வொன்றும் விருத்தம் முதலிய பாவினங்கள் போல வெவ்வேறு ஓசையுடையதாக வரும் இந்த சிந்து இசைப்பாடலாகும்.

சமனிலைச் சிந்தும் வியனிலைச் சிந்துவும் பெரும்பாலும் கண்ணியாகவே வரும். அது மட்டுமல்லாது காவடிச்சிந்து, தங்கச்சிந்து, நொண்டிச்சிந்து. வழிநடைச் சிந்து, ஆனந்தக் களிப்பு, நாடோடிப் பாடல்கள் எல்லாம் சிந்து பாடலாகவே அமையும் என்கிறார் புலவர் குழந்தை. அது மட்டுமல்லாது வளையற் சிந்து, சேவற்பாட்டு, புறாப்பாட்டு, குள்ளத்தாரச் சிந்து, ஏற்றப்பாட்டு, ஏசல், தாலாட்டு, ஒப்பாரி, உடுக்கைப்பாட்டு, கிளிக்கண்ணி, எக்காலக்கண்ணி, பலசரக்கு ஏலப்பாட்டு இலாவணி முதலியனவெல்லாம் சிந்து வகையேயாகும். இவைகளெல்லாம் சிந்துவின் இலக்கணத்தில் அமையும் என்கிறார் புலவர் குழந்தை.

**கி.வா. சகந்நாதன்**

தன்னுடைய கலைக்களஞ்சியத்தில், சிந்து என்பது இசைப்பாட்டு வகைகளுள் ஒன்று என்றும் அது பெரும்பாலும் மூன்று சீர்களைப் பெற்ற சிந்தடிகளாலும் அதைப் பழங்காலத்தில் சிந்து என்றும் வழங்கினர். பிறகு

*பல்லவி, அநுபல்லவி, சரணம் போன்று அளவொத்து வரும்* [6]

அடிகளை உடைய இசைப்பாடல்களைச் சிந்து என்கிறார்.

**த.சரவணத் தமிழன்**

இவர் தம் யாப்பு நூலில்

*சிந்துப் பாக்கள் நொண்டிச் சிந்து*
*காவடிச் சிந்தான ஆவகை இரண்டே*
*கிராமப் பையன் நொண்டிச் சிந்து*
*கையாள் வதற்கு மெய்யாய் அரிதே*
*முதலடிச் சீர்களும் தனிச்சொல் அன்றி*



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018  Available at: www.ijtlls.com

*மறியடிச் சீர்களும் எண்ணொத் திருப்பின்*
*சமனிலைச் சிந்தாம் ஒன்றின் மற் றொன்றுசீர்*
*மிகுநிலை யாயின் வியனிலைச் சிந்தாம்*
*அசையியை பொப்பன காவடிச் சிந்தே* [7]

மேற்கண்ட பாடல் வரிகள் நூற்பாவாக இருந்தாலும் புரியும் வகையில் சிந்துப்பாவுக்கான இலக்கணத்தை தொடுத்துள்ளார் த. சரவணத் தமிழன்.

**ம.ரா. பூபதி**

சிந்துப்பாவுக்கென்று முதன்முதல் ஒரு தனிநூலாக யாப்பிலக்கணம் செய்தவர் ம.ரா.பூபதி ஆவார். இவர் "கலைமணி பூபதியாம்" என்ற தம் நூலில் பொதுச்சிந்து, உரிச்சிந்து என்று பாகுபாடு செய்து கொண்டு இலக்கணம் கூறுகின்றார்,

*நாலடி ஐந்தடிச் சிந்துகள், ஈரடி மேல்வைப்புச் சிந்து, சமநிலைச் சிந்து, வியனிலைச் சிந்து, விரவுநிலைச் சிந்து, இயற்சிந்து, சந்தச் சிந்து, வண்ணச் சிந்து,*

*இயல் சந்தச் சிந்து, தளர் வண்ணச் சிந்து, விருத்தச்சிந்து, தனிநிலைச் சிந்து உறுப்பு சிந்து*

என சிந்துப்பாவை பலவாறாக பிரித்து, வகைப்படுத்தி அதற்கான இலக்கணத்தையும் கொடுத்துள்ளார்.

**யாப்பிலக்கண முறைகளின் வளர்ச்சியும், சிந்துப்பாவும்**

இயற்பாக்கள், வண்ணப்பாக்கள், சந்தப்பாக்கள், சிந்துப்பாக்கள் ஆகியவற்றில் ஒன்றின் இலக்கணமுறை மற்றொன்றுக்கு தொடர்புடையதாகும். இயற்பாக்களுக்கான இலக்கணப்பா, வெண்பா, ஆசிரியப்பா, வஞ்சிப்பா ஆகும். இசைப்பாக்களுக்குரியது கலிப்பா, பரிப்பாடலாகும், விருத்தங்களுடைய வளர்ச்சியே வண்ணப்பா, சந்தப்பா என இருநிலைப் பாவாகும். இவ்வாறு இயல், இசைப்பாக்கு ஏற்றவாறு சிந்துவை பிரித்து அதில் யாப்பிலக்கண முறை வைத்து சிந்துவை வளர்ச்சியடையச் செய்தனர் தமிழறிஞர்கள்.

சிந்து என்ற சொல்லுக்குச் சிந்துதல் என்ற வினைப்பொருளும், அளவடியில் சற்றுக் குறுகியதும், ஏழு, எட்டு, ஒன்பது எழுத்துக்களைப் பெற்ற அடிகளும், முச்சீர் அடிகளும், மூன்றடிப் பாடல்களையும் கொண்டு சிந்து என்ற பெயராகி, தொல்காப்பியர் காலம் முதல் தற்காலம் வரை சிந்துவானது வளர்ச்சியடைந்துள்ளது. சிந்துப் பாடலானது பெரும்பாலும் நாட்டுப்புற பாடல்களிலும், சித்தர் பாடல்களிலும் தேவாரப் பாடல்களிலும், ஐம்பெருங்காப்பியங்களான சிலப்பதிகாரத்திலும், சீவகசிந்தாமணியிலும், அற இலக்கிய நூல்களான திருக்குறள், நாலடியார், கொன்றைவேந்தன், நல்வழி, மூதுரையிலும், எட்டுத்தொகை நூல்களான புறநானூறு, பரிப்பாடல், கலித்தொகை போன்ற நூல்களிலும் மேலும் பாரதியார், பாரதிதாசன், நாமக்கல் கவிஞர், வாணிதாசன் போன்றோர்களின் பாடல்களில் சிந்துப்பாடலானது பாடப்பெற்று உள்ளது. அது மட்டுமல்லாது திசையிசைப்பாடல்களிலும், அதிகமான கண்ணதாசன் வரிகளிலும் சிந்துப்பாவினால்


International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



பாடப்பட்டதேயாகும். இவ்வாறு மேற்கண்ட ஆய்வின் மூலம், சிந்துப்பாவை யாவரும் பாடி அதில் யாப்பிலக்கணத்தை கையாண்டு காலந்தோறும் வளர்ச்சி அடையச் செய்தனர் என்பதில் பெருமிதமாகும்.

**அடிகுறிப்புகள்**

1. தொ.செய். பேரா. 37
2. யா. கலம். 24 உரை மேற்கேள்
3. வீரசோழியம் 3-13
4. வீர சோழியம் 3-33
5. பஞ்சமரபு – 89
6. கலைக் களஞ்சியம் - 3
7. யாப்பு நூல் 134-136

**துணை நூற்பட்டியல்**

1. தொல்காப்பியம்,தொல்காப்பியர் பொருளதிகாரம், பேராசிரியம். சி. கணேசையர். யாப்பருங்கலம், அமிதசாகரர், கழகப்பதிவு, சென்னை, 1973.
2. வீரசோழியம், புத்தமித்தரனார், பாபானந்தர் கழகப்பதிப்பு, சென்னை, 1942.
3. பஞ்சமரபு, அறிவனார், தெய்வசிகாமணிக்கவுண்டர் பதிப்பு, வேலாம்பாளையம், 1975.
4. குழந்தை, யாப்பதிகாரம், பாரி நிலையம், சென்னை.
5. கவிமணி, மலரும் மாலையும், பாரி நிலையம், சென்னை, 1967.
6. ஜகநாதன் கி.வா. கலைக்களஞ்சியம் - 3, தமிழ் வளர்ச்சிக்கழகம், சென்னை, 1956.
7. த. சரவணத் தமிழன், யாப்பு நூல்.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies



*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140

Vol. 1: Issue 1, July-2018

Available at: www.ijtlls.com

# வை. மு. கோதைநாயகியின் படைப்புகளில் பெண்ணியச் சிந்தனைகள்

**திருமதி. மோ. கிருத்திகா,**
**முனைவர் பட்ட ஆய்வாளர் மற்றும் விரிவுரையாளர்,**
**மன்னர் திருமலை நாயக்கர் கல்லூரி,**
**மதுரை.**

*மங்கையராய்ப் பிறப்பதற்கு மண்ணில்*
*நல் மாதவம் செய்திடல் வேண்டும்மா - அவர்*
*பங்கயக்கை நலம் பார்த்தல்லோ - இந்தப்*
*பாரில் அறங்கள் வளரும் அம்மா*[1]

என்றார் கவிமணி. பெண்கள் நாட்டின் கண்கள் என்று உணர்ந்தனர் பிற்கால இலக்கியவாதிகள். நம் இந்தியச் சமூகத்தில் பெண் தனித்து வாழ இயலாது. ஏதேனும் ஒரு குடும்ப உறவுடன் மட்டுமே இருக்க வேண்டும் என்ற சூழல் உள்ளது. தற்காலத்தில் பெண்ணியம் உலகம் முழுவதும் பறைசாற்றப்பட்டு வரும் சுயமரியாதை மற்றும் சுயஉரிமை கழகமாகும். பெண்ணியம் சார்ந்த படைப்பகள் அளப்பரிய மாற்றங்களை சமதாயத்தில் உருவாக்கி வருகின்றன. தமிழ் இலக்கியத்திலும் பெண்ணியம் சார்ந்த எண்ணிலடங்கா படைப்புகள் உள்ளன. அவற்றுள் வை.மு. கோதைநாயகி அம்மாள் நாவல்களில் அமைந்துள்ள கதாபாத்திரங்களின் வழி அக்கால பெண்களின் நிலைகளையும் அவர்தம் உணர்வுகளையும் ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**பெண்ணியம்**

பெண்ணியம், பெண்ணுரிமை, மகளிர் நிலை என்ற நிலைகளில் பெண்ணுக்கான சுதந்திரம் ஒவ்வொரு காலக்கட்டத்திலும் விரிவாகப் பேசப்படுகிறது. பெண்ணியம் என்னும் கருத்துருவாக்கம் பெண் கல்வி, சொத்துரிமை, முடிவெடுக்கும் தன்மை, விரும்பிய ஆடவரைத் திருமணம் செய்து கொள்ளுதல், ஒத்துவராத நிலையில் மண முறிவு செய்து கொள்ளுதல், பலதார மணத்தை எதிர்த்தல், இளவயது திருமணத்தை எதிர்த்தல், சமவேலைக்கு சம ஊதியம், சுய தொழில் என்ற வகையில் பெண்ணுரிமைக்கானச் சிந்தனைகளை பல்நோக்கு முறையில் வகைப்படுத்துகின்றது. பெண்ணியம் பற்றிய சிந்தனைகளை ஏற்றுக்கொள்ள இயலாத காலகட்டத்தில் எழுந்த வை.மு.கோதைநாயகயின் நாவல்கள் அவருடைய காலக்கட்டத்தில் இருந்த பெண்களின் நிலையை பதிவு செய்கின்றது. வை.மு.கோவின் நாவல்களில் காணப்படும் பெண் கதாபாத்திரங்கள் அக்காலகட்டத்தில் பெண்களின் சுதந்திரம் நம் இந்தியப் பண்பாட்டை சார்ந்தே அலையநதுருகக ்வண்டும் என்ற நிலை அவர் தம் நாவல்களில் வெளிப்படுகின்றது. பெண் கல்வி, பெண் சுதந்திரம், தேவதாசி ஒழிப்பு, வரதட்சணை ஒழிப்பு, குழந்தைத் திருமணம், கலப்பு மணம், சினிமா மோகம், பொருந்தா மணம், போன்ற சமூகச்சிக்கல்களைத் தன் படைப்புகள் மூலமாக முன் வைக்கின்றார்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018 Available at: www.ijtlls.com



**பெண் கல்வி**

வை.மு.கோதைநாயகியின் நாவல்களில் வரும் இளம் கதைத் தலைவியர், பெரும்பாலும் நன்கு கல்வி கற்றவர்களாக காட்டப்பட்டுள்ளனர். பெண்ணுக்கு விதிக்கப்பட்டிருந்த சமூகக் கட்டுப்பாடுகளுள் ஒன்று கல்வி மறுப்பு, ஆணைப்போல கல்வி கற்று உயர, பெண்ணுக்கு வாய்ப்புத்தரவும், பொருள் செலவழிக்கவும், பெற்றோர் முனவருவதில்லை. ஆனால் அக்காலக் கட்டத்தில் பெண் கல்விக்கு தடைவிதிக்கப்பட்டதாக தெரியவில்லை. இவருடைய பல நாவல்கள் பெண் கல்வியின் அவசியத்தை உணர்த்துகின்றது. இவர் எழுதிய ‘‘சாந்தியின் சிகரம்’’ என்ற நாவலில் தேவதாசிக் குலத்தில் பிறந்தவள் தன்னுடைய பெண் மக்கள் நால்வரையும் தேவதாசிகளாக மாற்றாமல் படித்த பெண்களாக வளர்க்கின்றாள்.

*யாரோ தேவதாசி புதிதாகக் குடிவந்திருக்கிறாள். அவருக்கு நான்கு பெண்கள். அந்தத்தாசி மிகவும் படித்தவள். ஒரு பெண்ணை பரத நாட்டியக் கலையிலும், ஒரு பெண்ணை ஹரிகதா காலட்சேப கலையிலும், ஒரு பெண்ணை உயர்ந்த உபாத்தியாயினியாகவும், ஒரு பெண்ணை டாக்டராகவும் படிக்க வைத்திருக்கிறாள்*[2] என்று கூறுவதன் மூலம் பெண்ணடிமைத்தனத்திற்கு வித்தாவது பெண்கல்வியின்மையே என்று உணர்த்துகிறார்.

பெண்களுக்குக் கல்வி நன்மார்க்கத்தைப் பரப்பவும், அறிவு வளரவும், உயர்தரமான நூல்களைப் படித்து தெரிந்து கொள்வதற்கும் உதவ வேண்டும். பெண்களுக்கு முக்கியம் குடும்ப நிர்வாகத்திற்கான படிப்பும், குடும்பத்தைச் சீராகவும், சிக்கனமாகவும் நடத்தும் முறைக்கான வீட்டுப்படிப்பும் என்று கூறுகின்றார்.

பெண்கள் அடிமைத்தனம் தீர கல்வி கற்க வேண்டும் என்று பேசும் வை.மு.கோ அவர்கள் பெண்ணின் கவுரவம் என்பது மென்மையாக பேசுவது, துன்பங்களைத் தாங்கிக் கொள்வது, பிறர் ஏசினாலும், பாராட்டினாலும் ஏற்றுக் கொள்வது, பெண் எப்படி இருக்க வேண்டும் என்ற அவரின் கதையில் பெண்கள் மென்மையை கையாள வேண்டும் என்கிறார்.

**திருமணம்**

சமுதாய அமைப்பில் திருமணத்தின் போது பெண்ணுக்கு மட்டுமே தகுதிகள் வகுக்கப்படுகின்றன. அதன் அடிப்படையில் தான் பெண்ணின் மணம் நிச்சியக்கப்படுகிறது. பெண்ணின் மனதை யாரும் அறிய விரும்புவதில்லை. ‘தயாநிதி’ என்ற சிறுகதையில் பெண்ணைணக் கோலத்தில் காணும் காலம் வரையிலும், நிம்மதியற்று அல்லாடும் தந்தையைக் காட்டியுள்ளார் வை.மு.கோ. 16 வயது மகளுக்கு 45 வயது வரன் வந்தது. தந்தையான திரு மூர்த்திக்கு கொஞ்சம் திருப்தியாய் இருந்தது[3] என்று ஏழ்மைக் காரணமாய் பெண்கள் திருமணச் சேற்றில் புதைப்படுவதை இவரது நாவல்கள் காட்டுகின்றன. மேலும், வரதட்சணை கொடுக்க முடியாததால் வயதானவரைத் திருமணம் செய்து கொள்ள வேண்டிய கட்டாயம் இருப்பதை இந்நாவலில் வரும் பெண் கதாபாத்திரம் மூலம் அறிய முடிகிறது.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



வரதட்சணை சமூகநடைமுறைகளில் ஒன்றாகவும், வரதட்சணை இல்லையென்றால் திருமணம் இல்லை என்ற நிலை இன்று வரை உள்ளது. இதனை,

*நல்லவிலை கொண்டு நாயைவிற்பார் - அந்த*
*நாயிடம் யோசனை கேட்பதுண்டோ*
*கொல்லத் துணிவின்றி நம்மையும் - அந்நிலை*
*கூட்டி வைத்தார், பழி கூட்டிவிட்டார்* [4]

என்று பாரதியார் பாடினார்.

மேலும், கற்பு நிலை குறித்தும் தன் நாவல்களில் குறிப்பிட்டுள்ளார். கற்பு என்பது பெண்ணின் நடத்தை முறைகேடுகளுள் ஒன்றாக சமூகத்தால் வரையறுக்கப்பட்டுள்ளது.

கற்பு என்பதற்கு *மணமாகாத பெண் எனில், திருமணமாகும் கணவன் ஒருவனுக்கே உண்மை உடையவளாதல், கணவன் தீயவனாயினும்? பிற பெண்களுடன் தொடர்பு கொள்பவனாயினும் அவன் பிழைகளைப் பொறுத்துத்தாங்கி அவனுக்கு நேர்மை உடையவளாக இருப்பதோடு, அவனையே தெய்வம் என தொழுதல்*[5] என விளக்கம் தரப்படுகிறது.

சமூகத்தில் கற்பு பற்றிய இவ்விளக்கங்கள் சமூகத்தில் நிலவிவரும் ஒரு சார்பு கண்ணோட்டமாகும். கற்பு பற்றிய ஒருதலைக் கண்ணோட்டத்தை பிற்காலச்சீர்திருத்தவாதிகள் இருபாலருக்கும் உரியது என்றனர். காந்தியடிகள், பாரதியார், பெரியார் போன்றோர் கற்பு நிலையை மறு சிந்தனைக்கும் உட்படுத்த வேண்டும் என்று விரும்பினர்.

*கற்பு நிலையென்று சொல்ல வந்தார் இரு*
*கட்சிக்கு அஃது பொதுவில் வைப்போம்*[6]

என்று பாரதி கற்பு நிலையை ஆண், பெண் இருவருக்கும் பொது வாக்குவோம் என்றார்.

கற்பு என்பது எல்லாப் பெண்களுக்கும் உரியது, குலப்பெண்களுக்குத்தான் உரியது என்று வரையறுப்பது போலியானது என்பது வை.மு.கோவின் கருத்தாகும். தாசி குலத்துப் பெண்ணாக இருந்தால் அப்பெண்களுக்கு கற்பு கிடையாது என்று இச்சமூகம் வரையறுப்பது கொடுமை என்கிறார்.

*ஹோமம் செய்யும் அக்கினியும் ஒரே நெருப்புத்தான். பிணத்தை எரிக்கும் நெருப்பும் ஒரே நெருப்புத்தான். இரண்டிலும் கைகைய வைத்தவன் சுட்டுத்தான் எரிக்கப்படுவான். தாசிப் பெண்ணாயினும் ஹோமத் தீயிலும் கொடிய தீயைப் போன்றது தான் அவளுடைய கற்பும்*[7] என்ற பொருத்தமான உவமை மூலம் தாசிக்குலப் பெண்களுக்கும் கற்பு உண்டு என்று எடுத்துரைக்கிறார்.

**முடிவுரை**

திருமதி. வை.மு.கோதைநாயகி அம்மாளின் நாவல்களில் கதாபாத்திரங்களின் மூலம் அக்காலக்கட்டத்தில் வாழ்ந்த பெண்களின் நிலையை அறிந்து கொள்ள முடிகிறது.


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com


பெண்ணியம் என்பது பற்றி அறியப்படாத காலக்கட்டத்தில் எழுந்த நாவாலாதலால் பெண்களின் சுதந்திரம் ஒரு குறிப்பிட்ட வரையறைக்குள் அடக்கப்பட்டுள்ளது.

பெண் கல்வியின் அவசியத்தை தன் நாவல்கள் அனைத்திலும் எடுத்துரைத்துள்ளார். பெண்ணடிமைத் தனத்திற்கு முக்கிய காரணம் கல்வியறிவின்மையே என்பது வை.மு.காவின் கருத்தாக இருந்துள்ளது. இளவயது திருமணம் சமுதாயத்தின் சீர்கேடு என்பதை இவருடைய நாவல்கள் சித்தரிக்கின்றன.

வசதி படைத்தவர்கள் ஏழைப் பெண்களைத் திருமணம் செய்து கொண்டு குடும்ப அமைப்பு முறைக்கு வழிகாட்ட வேண்டும் என்ற கருத்தும் காட்டப்பட்டுள்ளது.

கற்பு என்பது ஆண், பெண் இருவருக்கும் பொதுவானது என்கிறார். ஆண்களுக்கும், தாசிகுலத்துப் பெண்களுக்கும் கற்பு உரியது என்பதை சுட்டிக்காட்டியுள்ளார். இவ்வாறு தன் நாவல்களில் பெண் மக்களை நல்வழிப்படுத்தும் பணியை வை.மு. கோதைநாயகி அம்மாள் தொடர்ந்துள்ளதை அறிந்து கொள்ள முடிகிறது.

**அடிகுறிப்புகள்**

1. கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை, ப.66
2. வை.மு.கோ. சாந்தியின் சிகரம், ப.21
3. வை.மு.கோ. தயாநிதி, ப.203
4. பாரதியார் கவிதைகள்
5. எம்.ஏ.சுசிலா, தமிழிலக்கிய வெளியில் பெண் மொழியும் பெண்ணும், பக்.290,291
6. பாரதியார் கவிதைகள்
7. வை.மு.கோ. பவித்திரப் புதுமை, ப.96

**துணைநூற்பட்டியல்**

1. வை.மு.கோதைநாயகியின் கதைகள், 244, இராமகிருசுணா மடம் சாலை, மயிலாப்பூர், சென்னை-4.
2. கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை, ஆசியஜோதி, பாரிநிலையம், 59-பிராட்வே, சென்னை-1.
3. பாரதியார்,பாரதியார் கவிதைகள், பாரதியார் பதிப்பகம், சென்னை.
4. எம்.ஏ.சுசிலா, தமிழிலக்கிய வெளியில் பெண் மொழியும் பெண்ணும், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை.


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



# பீடுடையார் குடிசெய்வார்

முனைவர் ந.செ.கி.சங்கீத்ராதா,
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
தியாகராசர் கல்லூரி,
மதுரை.

‘பீடுடையார் குடி செய்வார்‘ என்பதில் ‘குடி’ என்பதனை குடும்பம் (இல்லறம்), குலம் (குடிப்பிறப்பு), அரசன் (குடி செய்பவன்), மக்கள் (குடிகள்) என்ற கருப்பொருள்களில் எடுத்துக்கொண்டு இவற்றுள் பெருமையுடையவர்கள் யாவர் அதாவது பெருமையுடைய குடும்பம், பெருமையுடைய குலம், பெருமையுடைய அரசன், பெருமையுடைய மக்கள் யாவர் என்பதை தக்க சான்றுகளோடு வள்ளுவத்தின் வழி ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**பீடுடைய பேறு**

இவ்வுலகில் ஒரு மனிதனுக்கு பெருமை தேடித் தரக்கூடிய உயர்ந்த பதவி, நிறைந்த செல்வம், பெரும் புகழ், உயரிய விருதுகள் என பல நிகழ்வுகள் உள்ளன. ஆனால் இவை எல்லாவற்றையும் விட எவனொருவன் இயல்பாக இல்லறக் கடமைகளிலிருந்து வழுவாது பணியாற்றுகிறானோ அதனைப்போல பெருமையுடைய பெயர் வேறில்லை. அதனைப் போன்று பெரும்பேறு பெறுவதற்கில்லை. இதனைத்தான்,

*கருமம் செயஒருவன் கைதூவேன் என்னும்*
*பெருமையின் பீடுடையது இல்(குறள் - 1021)*

என்றார் வள்ளுவர். இல்லறக் கடமைகளில் வழுவாதிருத்தல் பெரும்பேறாகும். அதனால் தான் இல்லறத்தில இருந்து கொண்டு இறைவனை வணங்கும் பேற்றினை நம்முடைய இந்து தர்மம் எடுத்து இயம்புகிறது. இறைநெறியும் இதனைப் பின்பற்றியே வணங்கப்பட்டது. *இல்வாழ்க்கையை ஒரு அறமாகக் கருதியதால் தான் தமிழன் அதனை இல்லறம்* [1] என்றான். இத்தகைய இல்லறத்தான் தான் எல்லோரையும் விட சிறந்தவனாகக் கருதப்பட்டான். அதனால்தான்,

*இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்*
*முயல்வாருள் எல்லாம் தலை (குறள் - 47)*

என்றான் வள்ளுவப் பெருந்தகை.

**இனிய இல்லறம்**

இத்தகைய இல்லறத்தின் இனிய காட்சியினை ஐங்குறுநூற்றுப் பாடல் வாயிலாகக் காணலாம். தலைவனும் தலைவியும் தம் புதல்வனை நடுவில் கிடத்தி இருமருங்கிலும் அவர்கள் படுத்திருக்கின்றனர். இந்தக் காட்சியை செவிலித்தாய் பார்த்து நற்றாயிடம் கூறுகின்றாள். அவர்கள் படுத்திருந்த நிலை, மான் தண் பிணையோடு குட்டியை நடுவில் போட்டு கிடத்தியிருந்தது போல் இருந்தது. இந்த இன்பம் நிலவுலகிலும் கிட்டாது. வானுலகிலும் கிட்டாது என செவிலித்தாய் அக்காட்சியைக் கண்டு அக மகிழ்ந்து கூறுகிறாள்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018 Available at: www.ijtlls.com



*மறிஇடைப்படுத்த மான்பிணை போல*
*புதல்வன் நடுவணன்ஆக, நன்றும்*
*இனிதுமன்ற அவர் கிடக்கை, முனிவுஇன்றி*
*நீலநிற வியலகம் கவைஇய*
*ஈனும் உம்பருங் பெறலருங்குரைத்தே 2*

**குறையை நிறைவாகக் காணல்**

திருமணமாகி தலைவன் இல்லம் சென்று மீண்ட தலைவியைப் பார்த்து அவளது தோழி நலம் விசாரிக்கிறாள். அப்போது தலைவன் நாட்டு தண்ணீர் எத்தகையது என வினவுகிறாள். அதற்குத் தலைவி, ஒருமுறை நானும் தலைவனும் இடைச்சுரம் சென்றுகொண்டிருந்தபோது எனக்கு தண்ணீர் தாகம் ஏற்பட்டது. அங்கே ஒரு குளம் தென்பட்டது. ஆதில் அழுகிய இலைகள் உதிர்ந்து காணப்பட்டன. மேலும் மான் உண்டு கலங்கிய எஞ்சிய நீறே இருந்தது. அதனை எடுத்துப் பருகிய எனக்கு அந்த நீர் நமது வீட்டு தேன் கலந்த பாலைக் காட்டிலும் இனிமையாக இருந்தது என்றாள். தலைவன் அருகிலிருக்கும் போது கழனித்தண்ணீர் கூட தலைவிக்கு கரும்புச் சாறாக இனிக்கின்றது. தலைவன்பால் தலைவி கொண்ட அன்பு எத்தகைய குறையையும் நிறைவாகவே பேச வைக்கின்றது. இதனை,

*தேன்மயங்கு பாலினும் இனிய அவர்நாட்டு*
*உவலைக் கூவற் கீழ*
*மான் உண்டு எஞ்சிய கலுழி நீரே [3]*

என்ற ஐங்குறுநூறு பாடவ் வரிகளில் காணலாம். அதனால்தான்,

*ஒன்றான் கூறாடை உடுப்பவரே ஆயினும்*
*ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை [4]*

என்கிறது கலித்தொகை. எவ்வளவு வறுமையாக இருந்தாலும், அன்பு இருப்பவர்களிடம் வறுமை தெரியாது இனிமையான வாழ்க்கையே தெரியும் என்று பறை சாற்றுகிறது.

**மெனக்கிடுதல்**

தலைவனுக்காகத் தலைவி உணவு சமைக்கிறாள். இதுவரை சமையல் அறிந்திடாதவள். ஏப்படியாவது உணவு சமைத்திடவேண்டும் என்ற எண்ணம், அவனுக்குப் பிடித்ததாக இருக்க வேண்டும் என்ற பரிதவிப்பு, அவன் வருவதற்குள் சீக்கிரம் முடிக்க வேண்டும் என்ற வேகம் இவை எல்லாம் ஒன்று சேர்ந்து தலைவியைப் துரிதப்படுத்துகின்றன. மோர்க்குழம்பு செய்கிறாள். கெட்டியாக உள்ள தயிரைப் பிசைந்துகொள்கிறாள். தயிர் பிசைந்த கையினை கழுவாமல் அப்படியே கட்டியிருந்த பட்டுப்புடவையில் தடவிக்கொள்கிறாள். அடுப்பில் தாளிக்கும்போது புகை வருவதால் கண்கள் சிவந்துவிடுகின்றன. புகையால் படியும் கரியும் முகத்தில் ஆங்காங்கே படிந்துள்ளன. இவ்வளவு பாடுபட்டு செய்த உணவினை கணவன் வந்தவுடன் பரிமாறுகிறாள். அவன்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018 Available at: www.ijtlls.com



நன்றாக உள்ளது என்றவுடன் அவளது முகம் முன்னைக்காட்டிலும் அதிகம் பொலிவுடன் காணப்பட்டது. இதனை,

*முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்*
*கழுஉறு கலிங்கம் கழாஅது உடீஇக்*
*குவளை உன்கண் குய்ப்புகை கமழத்*
*தான் துழந்தட்ட தீம்புளிப் பாகர்*
*'இனிது' என கணவன் உண்டலின்*
*நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே*[5]

அதனால் தான்,

*மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை*
*எனைமாட்சி தாயினும் இல் (குறள்- 52)*

என்றார் வள்ளுவர். இல்லறத்திற்கு விளக்கு இல்லாள் என்பதனை,"மடந்தை இல்லா மனை பாழே"! ஏன்பார் ஔவையார். இவ்வாறு தலைவனுக்காக தலைவி மெனக்கிடுதல் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

**நன்மக்கட்பேறு**

ஒரு குடும்பத்தில் மக்கட்பேறு சிறந்ததாக இருந்தால் அதை விடப் பேறு வேறில்லை. *மனைக்கு விளக்கம் மடவாள்: மடவாள் தனக்கு விளக்கம் நன்மக்கள்* [6]என்று நான்மணிக்கடிகையும்,

*மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன் நன்கலம்*
*நன் மக்கட் பேறு (குறள் - 60)*

என்று திருக்குறளும் இயம்புகின்றன. அப்பூதியடிகளின் மகன் பெரிய திருநாவுக்கரசு அரவம் தீண்டியும் தம் பணியை இடைவிடாது முடித்துவிட்டு (தாயிடம் வாழையிலையை கொடுத்துவிட்டு) வீழ்ந்தானோ அதுபோல, எவ்வாறு சிறுத்தொண்ட நாயனாரின் மகன் சீராளன் அவரது கருத்திற்கேற்றாற்போல மன மகிழ்வுடன் தந்தையின் சேவையில் தன்னை தியாகம் செய்தானோ அதுபோல பெற்றோர்களுக்கு புதல்வர்கள் அமைந்தால் அதைவிடப் பேறில்லை. அதனால்தான் "ஏவா மக்கள் மூவா மருந்து" என்றார்கள் பெரியோர்கள்.

*தம்மின்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து*
*மண்ணுயிர்க் கெல்லாம் இனிது (குறள் - 68)*

என்றார் வள்ளுவப் பெருந்தகை. ஒருமுறை புலவர் பிசிராந்தையாரிடம் உங்கள் நரை இல்லாமல் இருத்தலுக்கு என்ன காரணம்? என்று கோட்டார்களாம். அதற்கு அவர் நல்ல மனைவியும் அறிவார்ந்த பிள்ளைகளையும் பெற்றுள்ளதாலே எனக்கு நரையில்லை என்றாராம். அதனை,

*யாண்டு பலஆகினும் நரைஇல ஆகுதல்*
*மாண்ட என் மனைவியோடு மக்களும் நிரம்பினர்(புறம்.191)*



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018 Available at: www.ijtlls.com



என்ற புறநானூற்று பாடல்வரிகள் மெய்ப்பிக்கின்றன.

**விருந்தோம்பல்**

இல்லறக் கடமைகளிலே தலையாயது விருந்தோம்பல். தமிழனின் தனிச்சிறப்பு விருந்தோம்பல் பண்பாடு. அவ்வாறு எவனொருவன் விருந்தினர்களை உபசரித்து மகிழ்கிறானோ அவன் பெருமையுடையவன்.

*செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்*
*நல்விருந்து வானத் தவர்க்கு(குறள் - 86)*

என்கிறது வள்ளுவம். மாதவியை பிரிந்து கண்ணகியிடம் வந்த கோவலன் தனது செயலுக்கு வருத்தம் தெரிவித்தான். இழந்த செல்வத்தையும் நினைத்து வருந்தினான். அதற்கு, கண்ணகி விருந்தினர்களுக்கும் துறவிகளுக்கும் அந்தணர்களுக்கும் உபசரித்து உணவளிக்கும் பேற்றினை கோவலனை பிரிந்திருந்த காலத்தில் தான் இழந்ததாக குறிப்பிடுகிறாள் என்று விருந்தோம்பலின் சிறப்பை,

*அறவோர்க் களித்தலும் அந்தணர் ஓம்பலும்*
*துறவோர்க் கெதிர்தலும், தொல்லோர் சிறப்பின்*
*விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை*[7]

என்று சிலப்பதிகாரம் பதிவுசெய்துள்ளது.இராமாயணத்தில் விருந்தோம்பலின் சிறப்பு சீதையின் வாயிலாக விளக்கப்பட்டுள்ளது. சீதையைத் தேடி வந்த அனுமனிடம் சீதை இராமனை நினைத்து கவலைப்படுகிறாள். இராமனுக்கு யாா இலை போட்டு உணவிட்டு பரிமாறுவார்கள்? எனத் தவிக்கிறாள். விருந்தினர்கள் வந்தால் இராமன் என்ன செய்வான் என மனம் கலங்குகிறாள்? இதனை,

*அருந்தும் மெல்அடகு ஆர்இட அருந்தும் என்று அழுங்கும்*
*விருந்து கண்டபோது என் உறும்? என்று விம்மும்!* [8]

அவ்வாறு விருந்தினர்களை உபசரித்தும், இனிய மனைவி, அறிவார்ந்த பிள்ளைகளைப் பெற்ற ஒருவன் தனது குடும்பத்தை உயர்த்துவேன் எனப் பாடுபடும்போது அவனுக்குத் தெய்வம் வரிந்து கட்டிக் கொண்டு உதவுவதற்கு முன் வந்து நிற்கும் என்பதனை,

*குடிசெய்வல் எனும் ஒருவற்கு தெய்வம்*
*மடிதற்றுந் தான் முந்துறும் (குறள் - 1023)*

என்றும் திருக்குறளடிகள் எடுத்து இயம்புகின்றன.

**குலம் (குடிப்பிறப்பு)**

ஒருவனை மற்றவர்களுக்கு அடையாளப்படுத்துவது அவனது பதவி, படிப்பு, பணம் எனலாம். அதனையும் தாண்டி மோனை போல் முன் நிற்பது அவனது குடிப்பிறப்பாகும்.

*அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் இவ்விரண்டும்*
*பண்புடைமை என்னும் வழக்கு ள(குறள் - 992)*



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018 Available at: www.ijtls.com



பொதுவாக ஒருவன் தவறு செய்துவிட்டால், அவனைப் பிறர் கேட்கும் கேள்வி இதுவாகத்தான் இருக்கும். இந்த வீட்டுப் பிள்ளை நீ இப்படி செய்யலாமா? அவரோட பையன் தவறு செய்யலாமா? அவரது பேரன் தவறு செய்யலாமா? இந்த இடத்தில் அவனது பதவி, படிப்பு எல்லாம் போய் அவனது குடிப்பிறப்புதான் உலகத்தார் பார்வையில் முதலில் தோன்றும். அதனால்தான்,

*அடுக்கிய கோடி பெறினும் குடிப்பிறப்பார்*
*குன்றுவ செய்தல் இலர்* (குறள் - 992)

இராமாயணத்தில் இராவணன் சீதாப்பிராட்டியை சிறையெடுத்து வந்தபோது, அவளை விடுவிக்குமாறு கும்பகர்ணன் இராவணனுக்கு அறிவுரை கூறினான். அவனது தவற்றைக் கூறும்போது அவனது வீரமோ, கல்வியோ, கலையோ, பெற்ற வரமோ, சிவபக்தியோ இவை எதையும் முதலில் கூறவில்லை. அவனது குடிப்பிறப்பை முதலில் கூறி, பிரம்மனது குலத்தில் உதித்த நீ இப்படி தகாத செயலை செய்தல் கூடாது என்கிறான்.

*நீ அயன் முதற்குலம் இதற்கு ஒருவன் என நின்றாய்*
*ஆயிரம் மறைபொருள் உணர்ந்து அறிவு அமைத்தாய்*
*தீயினை நயப்புறுதல் செய்கை தெரிந்தாய்!* [9]

சிலப்பதிகாரத்தில், கண்ணகி தன்னை யாரையோ நீ மடக்கொடி? ஏனக் கேட்ட பாண்டியனிடம் தான் யார் என்று நேரடியாக சொல்லாமல், தமது குலப்பெருமையை முதலில் கூறி பின்னர் தன் கணவனைப் பற்றியும் தன்னைப்பற்றியும் கூறுகிறாள்.

*எள்ளறு சிறப்பின் இமையவர் வியப்ப*
*புள்ளுறு புன்கண் தீர்ந்தோன் அன்றியும்*
*வாயின் கடைமணி நடுநா நடுங்க*
*ஆவின் கடைமணி உகுநீர் நெஞ்சுட தான்தம்*
*அரும்பெறும் புதல்வனை ஆழியில் மடித்தோன்*
*பெரும்பெயர் புகார் என் பதியே! அவ்வூர்*
*ஏசாச் சிறப்பின் இசை விளங்கு பெருங்குடி*
*மாசாத்து வாணிகன் மகனே ஆகி*[10]

தனது கணவன் பசுவுக்கு நீதி வழங்கிய மனுநீதிச்சோழன், புறாவிற்காக தனது தசையை அறுத்துக் கொடுத்த சிபிச்சக்கரவர்த்தி ஆகயோரது நீதி வழுவா மரபில் வந்தவன் எனக் கூறுகிறாள்.

**அரசன் (குடி செய்பவன்)**

ஒரு நாடு எப்படி இருக்க வேண்டும் என்பதை, பசி, பிணி, பகை, அறியாமை இல்லாதிருத்தலே சிறந்த நாடு என்று வள்ளுவர் குறிப்பிடுகிறார். அத்தகைய நாட்டை ஆள்பவனே சிறந்த அரசன் என்றும் போற்றப்படுகின்றான்.

*உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்*


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018 Available at: www.ijtlls.com



*சேரா தியல்வது நாடு* (குறள் - 734)

புறநானூற்றில், குறுங்கோழியூர்கிழார் என்னும் புலவர் யானைக்கண் சேய் மாந்தரல் சேரல் இரும்பொறை என்ற சேரமன்னனின் குடிச்சிறப்பை அவனது ஆட்சித்திறனை மிக அருமையாகப் பதிவு செய்துள்ளார். சேரனின் நாட்டு மக்கள் வெம்மையை அறிந்ததில்லை. பகை இருந்தால்தானே வெம்மை வருவதற்கு. அவர்கள் சோறு சமைப்பதற்கான வெம்மை (நெருப்பு)யும் ஞாயிற்றின் வெம்மை மட்டுமே அறிந்தவர்கள். சேர நாட்டு மக்கள் ஆயுதங்களுள் ஒன்றான வில்லை அறியாதவர்கள். ஏனெனில் சேரனுக்கு பகை அரசனே இல்லை. அவர்கள் அறிந்தது வானில் தோன்றும் வானவில் மட்டுமே. அதேபோல் படைக் கருவிகள் அறிந்திலர். ஆவர்கள் அறிந்த ஒரே கருவி உழுபடை என்னும் ‘கலப்பை’ மட்டும்தான். சேரன் மற்ற நாட்டு மண்ணை உண்பான் (வெல்லுதல்). இவன் நாட்டு மண்ணை யாரும் உண்ண முடியாது. ஒருசிலரால் மட்டுமே உண்ண முடியும். ஆவர்கள் யார் தெரியுமா? சேர நாட்டிலிருக்கும் கர்ப்பமுற்ற பெண்கள் மட்டுமே அவனது மண்ணை உண்ண முடியும். அவனது ஆட்சியில் அறம் கவலையின்றி கட்டிலில் உறங்கும். குடிமக்களை தன் குழந்தைகளாகக் கருதி ஆட்சி செலுத்தினான் அரசன் எனினும் மக்கள் மனதில் அச்சம் கொண்டிருந்தனர். ஏன் தெரியுமா? நமக்கு எந்தவித துன்பமும் நேராமல் எல்லா செல்வங்களையும் நல்கி எதிரிகளிடமிருந்து காத்து வாழ்கிறானே நம் அரசன் அவனுக்கு என்ன நேர்ந்துவிடுமோ? என்று அச்சம் கொள்கின்றனர். இத்தகைய சேரனின் ஆட்சித்திறனையும் அறிவுத் திறனையும் ஈகைத்திறனையும் ஒப்பிட்டுப் பார்க்கிறார். விரிந்த நிலவுலகையும் அகன்ற ஆகாயத்தையும் ஆழ்ந்த கடலையும் வீசும் காற்றின் வேகத்தையும் எவ்வாறு அளந்தறிய முடியாதோ அதுபோல சேரனின் அன்பையும் அறிவையும் அளந்தறிய முடியாது என்கிறார். பின்னர் ஏதோ நெருடியது போல் இவற்றை எல்லாம் கூட அளந்துவிட முடியும். ஆனால், சேரனின் ஆற்றலை, மதி நுட்பத்தை கொடைத்தன்மையை அளந்தறிய முடியாது என்கிறார். ஒப்புமை கூறவந்ததை முதலில் ஒப்புவித்து பின்னர் அதனை மறுத்து சேரனுக்கு நிகர் சேரனே என்று கூறுகிறார்.

*இருமுந்நீர்க் குட்டமும்*
*வியன்ஞாலத்து அகலமும்*
*வளிவழங்கு திசையும்*
*வறிது நிலைஇய காயமும், என்றாங்கு*
*அவை அளந்து அறியினும் அளத்தற்கு அரியவை.*
*அறிவும் ஈரமும் பெருங்கண் ணோட்டமும்:*
*சோறுபடுக்கும் தீயொடு*
*செஞ்ஞாயிற்றுத் தெறல் அல்லது*
*பிறிது தெறல் அறியார் நின் நிழல்வாழ் வோரே:*
*திருவில் அல்லது கொலைவில் அறியார்:*



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



*நாஞ்சில் அல்லது படையும் அறியார்:*
*திறன் அறி வயவரொடு தெவ்வர் தேய அப்*
*பிறர்மண் உண்ணும் செம்மல்! நின் நாட்டு*
*வயவுறு மகளிர் வேட்டுவனின் அல்லது*
*பகைவர் உண்ண அருமண் ணினையே:*
*அம்புதுஞ்சும் கடி அரணால்*
*அறம் துஞ்சும் செங்கோலையே*
*புதுப்புள் வரினும் பழம்புள் போகினும்*
*விதுப்புறவு அறியா ஏமக் காப்பினை*
*அனையை ஆகல் மாறே:*
*மன்னுயிர் எல்லாம் நின் அஞ்சும்மே,* (புறம்.20)

இதைத்தான்,

*குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்*
*அடிதழீஇ நிற்கும் உலகு* (குறள் - 544)

என்றான் வள்ளுவன்.

**குடிமக்கள்**

ஒரு நாட்டிலுள்ள மக்களைப் பொறுத்தே அந்நாட்டின் அனைத்து நிலைகளும் வளம் பெருகும். மக்கள் நல்லவர்களாக இருக்க வேண்டும். அதனால்தான்,

*நாடா கொன்றோ காடா கொன்றோ*
*அவலா கொன்றோ மிசையா கொன்றோ*
*எவ்வழி நல்லவர் ஆடவர் அவ்வழி*
*நல்லை வாழிய நிலனே*

என்றார் ஔவையார். இங்கு ‘ஆடவர்’ என்பது மக்களைக் குறிக்கும். மக்கள் எங்கு நல்லவர்களாக இருக்கிறார்களோ அங்கு எல்லாமே நல்லவையாகத்தான் இருக்கும்.

“மன்னர் உயிர்த்தே மலர்தலை உலகம்” என்பது மாறி மக்கள் உயிர்த்தே மலர்தலை உலகம்” என்பதே சிறப்பாகும்.

**நிறைவுரை**

இங்஍னம், எவனொருவன் இல்லறக் கடமைகளிலிருந்து வழுவாது அறநெறியில் வாழ்கிறானோ, யாரொருவர் தமது குடிப்பிறப்புக்கு கலங்கம் உண்டாக்கும் செயலைத் தவிர்த்து நற்பெயரை ஈட்டுகிறாரோ, யாரொருவன் தனது குடிமக்களுக்கு எந்தவித தீங்கும் நேராது ஆட்சி செய்கிறானோ, எந்த மக்கள் கோபம், பொறாமை, கொல்லாமை, கயமை, அறியாமை, வன்மை, திருடாமை, போன்ற ‘மை’களை ஒழித்து பண்புடை’மை’யோடு வாழ்கிறார்களோ இத்தகையவர்களே உலகம் போற்றும் பெருமை பெற்ற பேற்றினைப் பெற்றவர்கள்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



**அடிக்குறிப்புகள்**

1.பேரா.இரா.மோகன், சங்க இலக்கியச் செவ்வி, பக்.140

2.மேலது, பக்,157

3.மேலது, பக்.168

4.மேலது, பக்.168

5.மேலது, பக்.110

6.எம்.நாராயண வேலுப்பிள்ளை, பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள், பக்.106

7.வ.த.இராமசுப்பிரமணியம்,(உ.ஆ.) சிலப்பதிகாரம், பக்.332

8. பி.ஜி.கருத்திருமன், கம்பர் கவியும் கருத்தும், பக்.361

9. வ.த.இராமசுப்பிரமணியம்,(உ.ஆ.) சிலப்பதிகாரம், பக்.379

10. பி.ஜி.கருத்திருமன், கம்பர் கவியும் கருத்தும், பக்.419

**துணைநூற் பட்டியல்**

1. இரா.மோகன் — சங்க இலக்கியச் செவ்வி, வானதி பதிப்பகம், 23, தீனதயாளு தெரு, தி.நகர். சென்னை-17.

2. கி.வா.ஜகந்நாதன் — அறப்போர், அமுதம் நிலையம், தேனாம்பேட்டை, சென்னை-18

3. பி.ஜி.கருத்திருமன் — கம்பர் கவியும் கருத்தும், தமிழ்ப் புத்தகாலயம், திருவல்லிக்கேணி, சென்னை-05.

4. வ.த.இராமசுப்பிரமணியம் (உ.ஆ,) — சிலப்பதிகாரம், திருமகள் நிலையம், தி.நகர், சென்னை-17.

5. எம்.நாராயணவேலுப்பிள்ளை — பதினெண் கீழ்க்கணக்க நூல்கள், நர்மதா பதிப்பகம், தி.நகர், சென்னை-1



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018 Available at: www.ijtlls.com



# பெண்விடுதலை நோக்கில் *மனோன்மணீயம்*

**முனைவர் நா. சுலோசனா,**
**உதவிப்பேராசிரியர்,**
**தமிழ்மொழி (ம) மொழியியல்புலம்,**
**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,**
**தரமணி, சென்னை.**

பெ. சுந்தரம் பிள்ளை அவர்களால் 1891-இல் எழுதப்பட்டது *மனோன்மணீயம்* என்னும் நாடக நூல். இது லிட்டன் பிரபு செய்யுளாக இயற்றியிருந்த *இரகசிய வழி* (வுாந ளுநஉசநவ றுயல) என்னும் ஆங்கிலக் கதையை முதல் நூலாகக் கொண்டு படைக்கப்பட்டது. தமிழில் வெளிவந்த முதல் நாடக நூல் மனோன்மணீயமாகும். பேராசிரியா் இதை ஓர் இன்பவியல் நாடகமாகப் படைத்துள்ளார். நாடக இலக்கியத்தில் இந்நூல் முதன்மையாகப் போற்றப்படுகிறது. இது தமிழின் மறுமலர்ச்சிக்கு வித்தாக அமைகின்றது. முன்னைப் பழமைக்கும் பின்னைப் புதுமைக்கும் ஒரு பாலமாக அமைகின்றது. பாயிரத்துடனும், கடவுள் வணக்கத்துடனும் இந்த நாடகம் தொடங்குவதே பழமையோடு உள்ள தொடா்பைக் காட்டுகிறது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் பாரதிக்கு முன்தோன்றிய பெண்மைப் புரட்சியாளர் சுந்தரனார் ஆவார். அவருடைய நாடகத்தில் கதைத் தலைவியின் தோழியாக வாணியைப் படைத்துள்ளார். வாணியின் பெண்மை கலந்த புரட்சிக் கருத்துக்களை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

நாடக நிகழ்வுக் களங்களாகத் திருநெல்வேலியும், திருவனந்தபுரமும் அமைந்துள்ளன. காப்பியங்களில் காண்டம், படலம், காதை போன்று நாடகத்தினுள்ளும் அங்கம் (யுஉவ), களம் (ளுஉநநெ) எனப் பகுக்கப்பட்டுள்ளது. மொத்தம் ஐந்து அங்கமும் இருபது களமும் அமைந்துள்ளன. முதல் அங்கத்தில் ஐந்து களமும், இரண்டாவது அங்கத்தில் மூன்று களமும், மூன்றாவது அங்கத்தில் நான்கு களமும், நான்காவது அங்கத்தில் ஐந்து களமும், ஐந்தாவது அங்கத்தில் மூன்று களமும் ஆக இருபது களங்கள் நாடகத்தின் வளர்ச்சிக்குத் துணை செய்கின்றன.

கவிதை நாடக வடிவில் அமைந்த மனோன்மணீயம் 4,500 அடிகளைக் கொண்டது. அதில் *நீராருங் கடலுடுத்த* எனத் தொடங்கும் பாடலைத் தமிழ்த்தாய் வாழ்த்துப் பாடலாகத் தமிழக அரசால் 1970-இல் அறிவிக்கப்பட்டது.

இந்நாடகம் சூழ்ச்சியும், காதலுமாகப் பின்னிப் பிணைக்கப் பட்டுள்ளது. மன்னன் சீவகன் பகுத்தறிவைப் பயன்படுத்தத் தொரியாதவனாக உள்ளான். சீவகனின் மகளான மனோன்மணியின் பெயரையே ஆசிரியர் நாடகத்தின் தலைப்பாக்கிப் பெண்மையை முதன்மைப் படுத்தியுள்ளார். பெண்ணுக்கு முக்கியத்துவமும் முதன்மைப்படுத்தலும் இல்லாத



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018 Available at: www.ijtlls.com



காலகட்டத்தில் ஆசிரியர் கதைத் தலைவியின் பெயரையே நாடகத்தின் பெயராக வைத்திருப்பதில் ஆசிரியரின் பாங்கு வெளிப்படுகிறது.

*பெண் விடுதலையே சமூகத்தின் விடுதலை* என்கிறார் அண்ணல் அம்பேத்கர். பெண் சுயமாகச் சிந்திப்பதும், தனக்கான உரிமையைப் பெறுவதும், சமூகத்தில் பெண் தான் ஒரு அங்கம் என்ற நிலைப்பாட்டைப் பெறுவதுமென இவை எல்லாம் பெண்ணுக்குக் கிடைக்குமென்றால் அச்சமூகம் வளர்ச்சியடந்த சமூகமாகக் கருதப்படும்.

*உடனடிமை யொழியவேண்டும்-பெண்கள்*
*உரிமையடைய வேண்டும்-*
*வேறென்ன வேண்டும்.* (ஜீவாவின் பாடல்கள், ப.120)

பெண்ணுரிமை பெற்றால் தான் நாடு உரிமை பெற்ற பயனை அடைந்ததாக அமையும். ஆணும் பெண்ணும் விடுதலைக் காற்றைச் சுவாசிக்க வேண்டும் என்கிறார் பொதுவுடைமைத் தோழர் பா.ஜீவானந்தம். பெண்ணை *மாயப் பிசாசு* எனப் பிதற்றியவர்களின் வாய்களுக்கும் மனத்திற்கும் புரட்சிப் பூக்களைக் கொண்டு பூட்டுப் போட்டவர் பாவேந்தர் பாரதிதாசன். பாரதியைத்தான் பெண் விடுதலைக் கவிஞர் என்று அறிந்திருக்கிறோம். அதற்கு முன்னமே சுந்தரனார் வாணி என்னும் கதாபாத்திரத்தின் வழி பெண் விடுதலையை எடுத்துக் காட்டியுள்ளார். *பெண்ணுக்குச் சுயமாகச் சிந்திக்கும் அறிவு வேண்டும்* என்ற தந்தை பொரியார்,*மாதராய்ப் பிறப்பதற்கே நல்மாதவஞ் செய்திடல் வேண்டுமம்மா!* என்ற கவிமணி, இவர்களுக்கு முன்னமே பெண் தனக்கான உரிமையைப் பெற்று, தனக்கு துன்பம் வரும் போது எதிர்த்துப் போராட வேண்டும் என்ற மன வலிமையைப் பெண் பாத்திரத்திற்கு உடைமையாக்கியவர் சுந்தரனார்.

வாணியும், மனோன்மணியும் மாலைப் பொழுதிலே கழல் விளையாடுகின்றனர். சிவபெருமான் மன்மதனை எரித்த கதை விளையாட்டின் பொருளாக அமைகின்றது. சிவபெருமான், மன்மதன் இருவரில் வெற்றி பெற்றவர் சிவபெருமானே எனும் போது மனோன்மணியின் காதல் இல்லாத உள்ளத்தையும் மன்மதனே வெற்றி பெற்றவன் எனும் போது வாணியின் காதலுள்ளம் வெளிப்படுகிறது.

*எரிந்தனள்ஆயிலென்என்றென்றுந்தம்முடல்*
*கரிந்ததுபாதியென்றாடாய்கழல்.* (முதல் அங்கம், இரண்டாம் களம், பா.4)

கழல் விளையாட்டின் வழி வாணி, தன் காதல் பொங்கும் உள்ளத்தை வெளிப்படுத்த விரும்பி,

*உருவங்கரந்தாலென்? ஓர்மலரம்பினால்*
*அரையுருவானா ரென்றாடாய் கழல்,*
*அந் நடராஜனென் றாடாய்கழல்.* (முதல் அங்கம், இரண்டாம் களம்)

என்று பாடுகிறாள். இதன் வழி இறைவனைக் கூறுவது போல் தன் உயிர்க் காதலனான நடராஜனைப் பற்றிக் கூறுகிறாள். இவ்விளையாட்டில் வாணி மறைமுகமாகத் தன் காதலுணர்ச்சியை வெளிப்படுத்தும் விதத்தைக் காணமுடிகின்றது.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



*நாட்டம் இரண்டும் அறிவுடம் படுத்தற்குக்*

*கூட்டி உரைக்கும் குறிப்புரை ஆகும். (தொல். களவியல்.93)*

என்றும்

*காமத் திணையில் கண்நின்று வருஉம்*

*நாணும் மடனும் பெண்மைய ஆகலின்*

*குறிப்பினும் இடத்தினும் அல்லது வேட்கை*

*நெறிப்பட வாரா அவள் வயின் ஆன.* (தொல். களவியல்.106)

என்றும் தொல்காப்பியம் கூறுகிறது. தலைவி தன் வேட்கையை நாணத்தின் காரணமாகக் குறிப்பாக உணர்த்துவாள். அதைப் போல வாணியும் கழல் ஆடும் போது தன் காதலனின் பெயரைக் குறிப்பிடுகிறாள். இதன் வழி காதலின் வளர்ச்சி கை கூடுகிறது. அவ்விளையாட்டின் வழி வாணியின் காதலுள்ளத்தை அறிந்து கொண்ட மனோன்மணி,

*ஏதடிவாணி! ஓதியபாட்டில்*

*ஒருபெயர் ஒளித்தனை பெருமூச்செறிந்து?*

*நன்று! நன்று! நின்நாணம்*

*மன்றலும் ஆனது போலும் வார்குழலே!*

(முதல் அங்கம், இரண்டாம் களம் பா.1-4)

என்று பாடுகிறாள். ஒரு பெண்ணின் உள்ளத்தை இன்னோரு பெண் அறிந்து கொண்டு மறைமுகமாகச் சொன்ன காதலுள்ளத்தைப் போட்டு உடைக்கிறாள். இதற்கே பெண்ணுக்கு மனவலிமை வேண்டுமே. இன்றைய சூழலோ வேறு.

வாணியின் தந்தை சகடன் பொருள் ஆசை கொண்டு வாணியின் காதலன் நடராஜன் ஒரு பித்தன், அறிவற்றவன் என்று கூறி, குடிலனின் மகனாகிய பலதேவனுக்கு வாணியை மணஞ் செய்விக்க விரும்பினான். அதன் மூலம் தனக்குச் செல்வத்தையும், சமூக மதிப்பையும் தேடிக் கொள்ள விரும்பினான். காதலில் நம்பிக்கை கொண்டிருந்த வாணி இச்செய்தியைக் கேட்டவுடன் மனம் நடுங்குகிறாள். பெண்ணின் தலைவிதியை எண்ணி வருந்துகிறாள்.

*தந்தையும்கொடியன்தாயும்கொடியள்!*

*சிந்தியார்சிறிதும்யான்படும்இடும்பை,*

*என்னுயிர்க்குஉயிராம்என்காதலர்க்கும்*

*இன்னல்இழைத்தனர்எண்ணியஎண்ணம்*

*முதலையின்பிடிபோல்முடிக்கத்துணிந்தனர்,*

*யாரொடுநோவேன்?யார்க்குஎடுத்துரைப்பேன்?*

(முதல் அங்கம், இரண்டாம் களம், பா.34-42)

என்று வாணியின் மனமானது காதலை எண்ணிப் புலம்புகிறது. தன் மனம் நாடியவனைக் கை பிடிப்பது என்பது பெண்ணுக்குச் சமூகத்துடன் காலந்தோறும் தொடரும் போராட்டமாகத்தான் அமைகிறது.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



பாரதியின் *குயில் பாட்டு* கூறும் *காதல் காதல் காதல் காதல் போயின் சாதல் சாதல் சாதல்* எனும் கொள்கையில் உறுதி கொண்டவளாக இருந்தாள் வாணி. இறந்தாலும் இறப்பேனே தவிர ஒரு நாளும் பலதேவனை மணக்க இசைய மாட்டேன் என்று தன் கருத்தைத் திடமாகக் கூறுகிறாள்.

*வதுவையும்வேண்டிலர் வாழ்க்கையும்வேண்டிலர்*
*ஒருமொழிவேண்டினர் உரைத்திலேன்பாவி!*
*நச்சினேன்எனுமொழிக்கேஅவர்க்கிச்சை.*
*பாச்சியான், ஓகோ! பேசினேன்இலையே!*
*இனியென்செய்வேன்?* (முதல் அங்கம், இரண்டாம் களம், பா.123-124)

என்பதின் வழி, வாணியின் காதலுணர்ச்சியும், மன உறுதியும், ஒழுக்க உயர்வும் ஒருங்கே புலப்படுத்துகிறது.

ஒரு பெண் ஒருவனை மனதார நேசிப்பது உண்மையானால் அவனைக் கடைசி வரை மறக்க மாட்டாள், அவனைத் துறக்கவும் மாட்டாள் என்பதற்கு வாணியின் காதல் சான்றாக அமைகின்றது. மனத்தில் நிலைத்தவன் ஒருவன், கைப்பிடிப்பது ஒருவன் என்ற வாழ்க்கை பெண்ணின் உளப் போராட்டமாக அமைகிறது. பெற்றோர் பார்த்து மணமுடிக்கும் காலத்தில் பெண்ணே தனக்குரிய காதலனைத் தேர்ந்தெடுப்பது புரட்சியாகும்.

*மாதர் உரிமை மறுப்பது மாண்பா?*
*மாதர் முன்னேற்றத்தால் மகிழ்வது மாண்பா?*
*மேதினி துயர்பட விரும்புதல் இதமா?*
*விதவைக்கு மறுமணம் உதவுதல் இதமா?*
*கோதையின் காதல் மணம் கொள்வது நீரோ?* (பா.கவி. ப.144)

ஆடவர்க்கு உள்ள உரிமை அனைத்தும் மகளிர்க்கு வேண்டும், உரிமை அனைவருக்கும் பொது என்கிறார் பாவேந்தர்.

வாணியை பலதேவனுக்கு மணம் முடிக்க நினைத்தவுடன் வாணி தன் காதலனை மறந்து *தன்னுயிர் தாங்குவது எவ்விதம்? மன்னவன் கட்டளை மறுப்பது எவ்விதமோ?* எனப் புலம்புகிறாள். நடராஜனைத் தவிர்த்து மற்ற ஆடவரைத் தனது உள்ளம் நாடாது. அது நஞ்சை விடக் கொடியதாகும் என்பதை;

*நஞ்சும்அஞ்சிலேன் நின்சொல்அஞ்சினேன்,*
*இறக்கினும்இசையேன், தாமேதுறக்கினும்*
*மறப்பனோஎன்னுள்ளம்மன்னியஒருவரை?*
*ஆடவராகமற்றெவரையும்*
*நாடுமோநான்உளவளவும்என்னுள்ளமே!*

(முதல் அங்கம், இரண்டாம் களம், பா.48-52)



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018 Available at: www.ijtlls.com



எடுப்பாற்கைப் பிள்ளையான மன்னன் சீவகன், வாணியிடம் நடராஜன் ஒரு *பித்தன்* என இகழ்ந்துரைக்கிறான். அப்போது வாணி மன திடத்தோடு இருக்கிறாள். சீவகன் பலதேவனுக்கு உடன்படுவது உன்கடமை என்று சொல்லும் போது வாணி அரசன் என்றும் பாராமல் தனிப் பெண்ணாக, வீரத்தோடு அரசனுடைய வார்த்தைக்குக் கட்டுப்படாமல் தன் காதல் உரிமையை நிலை நாட்டுகிறாள்.

*மன்னன் கூறியதற்கு இணங்காமல் பலதேவனை மணக்காவிட்டால் நேருவது என்ன?* என்பது போல் துணிச்சலாக வினா எழுப்புகிறாள். பெண்களின் நியாயமான வார்த்தைக்கு இடங்கொடுக்காத காலத்திலும், பெண்களை அடக்கியாளும் சமூகத்திலும் ஒரு பெண் அரசனை எதிர்த்துக் கேள்வி கேட்கும் அளவிற்குத் துணிச்சல் காரியாகப் பேராசிரியர் வாணியைப் படைத்துள்ளார்.

அரசன் பலதேவனை மணக்காவிடில் கன்னியாய்த்தான் இருப்பாய் என்று சினத்தோடு கூறும் போது அதற்குச் சம்மதம் என்கிறாள்.

*சீவகன் கன்னியாய் இருக்கையில் என்அழகு என்னாம்?*
*அரைக்கில் அன்றோ சந்தனம் கமழும்?*

(முதல் அங்கம், இரண்டாம் களம், பா.116-117)

பெண்கள் படைக்கப்பட்டிருப்பதே ஆண்களுக்காகத் தான் எனச் சமூகம் கட்டமைத்திருக்கிறது. அது தான் குடும்ப அமைப்பாகவும் திகழ்கிறது.. பெண்களின் கருத்துக்கு மாறுபாடாகத் திருமணத்தை முடிவு செய்யும் காலத்தில் பெண்கள் மன உறுதியுடனும், மதி நுட்பத்துடனும் செயல்பட்டால் வெற்றி பெறுவது திண்ணமாகும். *காதல் அடைதல் உயிரியற்கை* என்கிறார் பாவேந்தர்.

*காதல் என்பது முயற்சியாம் வழியில் அயர்ச்சி நேரிடில்*
*ஊன்றுகோலாய் அவர் ஊக்கம் உயர்த்தியும்,*
*இவ்விதம் யாரையும் செவ்விதற்படுத்தி,*
*இகத்துள்ள அகத்திற்கு அளவுகோலாகி*
*பரத்துள அகத்தை வரித்த சித்திரமாய்,*
*இல்லறம் என்பதன் நல்லுயிரே யாய்*
*நின்ற காதலின் நிலைமை* (முதல் அங்கம், நான்காம் களம், பா.94-100)

என உறுதிப்பட்ட காதலானது இல்லறத்தில் இணையும் என்பதால் இரும்பும் காந்தமும் போல் இல்லற வாழ்வு என்றாகி ஒருவரால் ஆக்கப்படும் பொருளே காதல் என்று காதலுக்கு விளக்கம் சொல்வதாக உள்ளது.

வாணியை ஓர் அறிவுப் பாத்திரமாகப் படைத்துள்ளார். வாணியின் உணர்ச்சி வயப்பட்ட சொற்கள் அவளைப் புரட்சிப் பெண்ணாகக் காட்டியுள்ளது. வாணியின் புரட்சி குணம் தன் காதலை வெளிப்படுத்தும் விதத்தை ஆசிரியர் முதல் அங்கத்திலேயே கழல் விளையாட்டின் வழி எடுத்துக் காட்டியுள்ளார். வாணி தன்னுடைய காதலை நிலைப்படுத்துவதற்கு அரசனிடம்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



வாதாடி வழக்குரைத்து, தன் காதல் நோக்கத்தை நிறை வேற்றிக் கொள்ளும் வாணியின் பெண்மை போற்றத்தக்கதாகும். கழல் விளையாட்டில் மன்மதனுக்கு வெற்றி என்பதன் வழி மரபுகளை உடைக்கும் புரட்சிப் பெண்ணாகக் காட்டியுள்ளார். கதைத் தலைவியான மனோன்மணியின் காதல், தன் தந்தையின் அன்பினால் தந்தையின் விருப்பத்திற்குக் கட்டுப்பட்டுத் தன்னுடைய காதலை வெளிப்படுத்த முடியாத சாதாரணப் பெண்ணாகப் படைத்துக் காட்டியுள்ளார்.

மனோன்மணி சுந்தரமுனிவரிடம் வாதிட்டு தவத்திற்குரிய விளக்கமளிக்கும் அறிவுப் பெண்ணாவாள். புருசோத்தமன் மீது கொண்ட காதலை வெளிப்படுத்தத் தெரியாதவளாக, பக்தி நிறைந்தவளாக, உணர்ச்சிகளை அடக்கியாளும் ஆற்றலைப் பெற்றவளாகக் காட்சி தருகிறாள். இவ்விரு பெண்களிலும் வாணி புரட்சியில் உயர்ந்து காணப்படுகிறாள். மனோன்மணியோ தன் குணத்தால் போற்றப்படுகிறாள். இவ்விருவருடைய பங்கும் முதல் அங்கத்திலேயே அதிகமாகப் பேசப்பட்டுள்ளது.

இவ்விரு பெண்களையும் அறிவுப் பெண்களாகப் படைத்திருப்பது பெண்ணின் பெயரையே நாடகத்திற்கு உற்ற தலைப்பாகத் தெரிவு செய்தது, நாடகத்தின் தொடக்கத்திலேயே இவ்விருவரையும் அறிமுகப்படுத்துவது எனப் பெண்மைக்கு முக்கியத்துவம் அளித்து முதல் பெண் விடுதலைவாதியாகப் பேராசிரியர் சுந்தரனார் திகழ்கிறார் என்று திண்ணமாகின்றது.

**துணைநூற்பட்டியல்**

1. *மனோன்மணீயம்*, பெ. மீனாட்சி சுந்தரம்பிள்ளை, 1891.
2. *தொல்காப்பியம்*, இளம்பூரணார் (தொ.ஆ), தமிழ்ப் புத்தகாலயம், திருவல்லிக்கேணி, சென்னை-05.
3. *பாரதிதாசன் கவிதைகள்*, திருமகள் நிலையம், தி.நகர், சென்னை-17.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



# சங்க இலக்கியப் போர்ப்பதிவுகள்

**முனைவர் பெ.சுவாதி,**
**உதவிப்பேராசிரியர்,**
**தமிழ்த்துறை (சுயநிதிப்பிரிவு),**
**நா.ம.ச.ச.வெள்ளைச்சாமி நாடார் கல்லூரி,**
**நாகமலை, மதுரை.**

மானிடத்தின் சமூக வளர்ச்சி என்பது முதலில் வேட்டையாடுதல், உணவு சேகரித்தல் பின்பு பயிரிடுதல் எனப் படிப்படியாக வளர்ச்சி பெற்றது. டார்வினின் பரிணாமக் கொள்கையின்படி குரங்கிலிருந்து வளர்ச்சி பெற்ற மனிதன் எப்பொழுது ஒரு குழுவாக இணைந்து, சமுதாயமாக வாழ முற்பட்டானோ அன்றே இடம்பிடிக்கும் அல்லது நாடு பிடிக்கும் ஆசையும், பொறாமையும் அதன் காரணமாகப் போரும் பூசலும் துவங்கிவிட்டன. நிலத்தில் தன் இருப்பைத் தக்கவைத்துக் கொள்ள அனைத்து உயிரினங்களும் போராடும்போது அவ்விடத்திலே போர் இன்றியமையாததாகி விடுகின்றது. மனிதனின் இடம் மற்றும் உணவுத் தேவைக்காக ஆரம்பித்த சிறு மோதலானது பின்னாளில் போர் என்னும் பரிணாம வளர்ச்சியைப் பெற்றது. இவ்வாறு ஆரம்பித்த போரில் ஒரு புறம் வெற்றியும், மறுபுறம் தோல்வியும் ஏற்பட்டாலும் இரு புறங்களிலும் உயிரிழப்பும், பொருளிழப்பும் மிகுதியாகவே இருக்கின்றன.

**போர் - ஓர் அறிமுகம்**

போர் என்பது மனிதச் சமுதாயத்தின் ஆரம்பத்தில் இருந்தே தோன்றிவிட்டது. காட்டுமிராண்டியாகவும், நாடோடியாகவும் வாழ்ந்த மனிதன் தன் உணவுத் தேவைக்காக ஒரு விலங்கைக் கல்லை விட்டெறிந்து என்று அதனை எதிர்த்துப் போராட ஆரம்பித்தானோ அன்றே போர் என்னும் உயிர் கொல்லும் நிகழ்ச்சி மறைமுகமாகத் தோன்றிவிட்டது. தன்னுடைய வேட்டையாடும் எல்லையை விரிவுபடுத்தித் தன் குழுவினைப் பாதுகாக்க வேண்டி மற்றொரு குழுவுடன் போராட முனைந்தபோது போர் நேரடியாகத் தோன்றியது. அதன் நீட்சியாகத் தன்னை ஒரு குழுவுக்கு மட்டும் தலைவனாக இல்லாமல் ஒட்டுமொத்தக் குழுவுக்கும் தலைவனாக முனைந்தபோது அதுவே போர் வெறியாக மாறியது. இதைக் கா.கோவிந்தன் குறிப்பிடும்போது “போர் விரும்பத் தகாத ஒன்று. வேண்டாததும்கூட என்றாலும், போர் நிகழாத நாடு உண்டா? இல்லை. அது நிகழாத காலத்தைக் காணமுடியுமா? இயலாது. போர் புரியாத உயிரினம் ஏதேனும் உண்டா? இல்லை. பனி தவழும் உலகின் கோடியிலும் போர், இருள் தவழும் பெருங்காட்டு நிலமாம் உலகின் இடைப்பகுதியிலும் போர், உலகம் தோன்றிய நாள் தொட்டுப் போர் தொடர்ந்தே வருகின்றது. காட்டுக் கொடுவிலங்குகளும் போர் புரிகின்றன. நாட்டில் வாழும் நாகரிக நெறி கற்ற மக்கள் இனமும் போர் புரிகின்றனர். இன்று நாம் காணும் இவ்வுலகமே மக்கள்இனம் மற்ற இயற்கைகளோடு ஓயாது நடத்திய போராட்டத்தின் உறுபயன் ஆகும்”[1] என்று போராட்டத்தை நியாயப்படுத்துகிறார். ஆனால் ஜான் ரிச்சர்டு கிரீன் என்பவர்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018  Available at: www.ijtlls.com

போரினை அறிவீனமான படுகொலை என்று கூறினாலும் ஒரு மனிதனின் தனித்தன்மை அல்லது அவன் சமுதாயத்திற்கு ஆற்றிய தொண்டும் அதில் மறைந்துள்ளது என்பதை மறுத்தற்கியலாது. 'படைத்துறைத் தத்துவ ஞானியான கார்ல்வான் கிளாஸ்விட்ச் என்பவர் 'போர் பற்றி'(On War) எனும் நூலைப் படைத்தார். அந்நூலில் அவர் பிற வழிவகைகளுடன் கலந்த அரசியல் உறவின் தொடர்ச்சியே போர் என்று குறிப்பிட்டார்.''[2] போர் என்னும் நிகழ்வு காலங்காலமாக மனிதனின் நாகரிக முதிர்ச்சியற்ற இயல்புகளை எடுத்துக் காட்டுகிறதேயன்றி பண்பாடு மிகுந்த நாகரிகமுள்ள சமுதாயத்தின் நடவடிக்கைகளை எடுத்துக்காட்டவில்லை என்பதே உண்மை.

**போருக்கான காரணங்கள்**

போருக்கெனப் பல காரணங்களை அறிஞர்கள் உரைக்கின்றனர்.

1. அளவு கடந்த மண்ணாசையால் போர் நிகழ்வதுண்டு.
2. தன்னாட்டில் வாழும் குடிகள் வாழ்வதற்குப் போதிய இடமில்லாததனால் இடம் சிறிதெனினும் ஊக்க மேலீட்டால் போர் நிகழ்வதுண்டு.
3. உலகம் பிற அரசருக்கும் பொதுவானதென்னும் சொல்லைப் பொறுக்கமாட்டாமல் தன் நாடு சிறிதென்னும் நோக்கில் போர் நிகழ்வதுண்டு.
4. தாமே அரசர்க்கு அரசராகத் திகழ வேண்டுமென்ற உட்கோளின் காரணமாகவும் போர் நிகழ்வதுண்டு.
5. அரசுரிமைக்குத் தடை ஏற்படும்பொழுது போர் நிகழும்.
6. அரசரின் புதல்வர் தமக்கு வரும் அரசுரிமையைத் தந்தையர் அரச பதவியைத் துறக்குமுன்பே பெறுவதற்குத் தந்தையருடன் போர் நிகழ்வதுண்டு.
7. சொல்லில் அல்லது செயலில் மனக்குறைவு ஏற்பட்டாலும் போர் நிகழும்.
8. மகள் மறுத்தல் காரணமாகவும் போர் நிகழ்வதுண்டு.

இவை போன்ற காரணங்களாலேயே பெரும்பாலும் போர்கள் ஏற்படுகின்றன.

**சங்கப் பாடல்களில் போர்**

உலக மொழிகள் அனைத்தும் தம் இலக்கியங்களைப் போரில் இருந்துதான் பதிவு செய்யத் துவங்குகின்றன. சங்ககாலத்தின் பல பாடல்கள் போரை மையமிட்டே எழுந்துள்ளன. இப்பாடல்கள் தங்கள் தலைவனும் வீரர்களும் பகைவர் நாட்டின் வளங்களையெல்லாம் எவ்வாறு அழித்தனர் என்பதை விளக்குவதாக இவ்வியல் அமைகின்றது.

*மைந்து பொருளாக வந்த வேந்தனைச்*
*சென்றுதலை அளிக்குஞ் சிறப்பிற் றென்ப*[3]

என்கிறார் தொல்காப்பியர். தனது வலிமையைப் பொருளாகக் கருதி வந்த அரசனை எதிர்த்துச் சென்று அவனை அழிக்குஞ் சிறப்புடையது என்பதே இதன் பொருள். இவ்வாறு செருக்கோடு வந்த ஓர் அரசனின் ஆணவத்தை அழிப்பது அக்காலத்தில் மிகப்பெரிய



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



அறமாகக் கருதப்பட்டது. ஆனால் அவன் ஆணவத்தை அழிக்கும் பொருட்டு இருபுறமும் ஏற்படுகின்ற இழப்பு என்பது அந்தந்த நாட்டின் மிக முக்கிய மனிதவளங்களாகும். இதைக் கா.கோவிந்தன் “இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முந்திய அப்பழங்காலத்தில் வாழ்விலும், வளத்திலும், அறிவிலும், ஆண்மையிலும் தமிழினத்தை மிஞ்சிய இனம் வேறு இல்லை. ஆகவே தம் வறுமையும் பிறர் வளமையும் காரணமாக எழும் காழ்ப்புணர்வு கொண்டு பிறர்மீது போரிட்டு எழவேண்டிய நிலை பழந்தமிழர்க்கு உண்டாகவில்லை. மாறாகத் தாம் பெற்றிருந்த வளமான வாழ்வு பெற்றிடாத பிறர், தம் வளம் கண்டு கொண்ட காழ்ப்புணர்வு காரணமாகத் தம்மீது போர் தொடுத்து வந்தகாலை, அவ்வாறு வந்தாரை வென்று ஓட்டுவதற்கே அவர்கள் போர் மேற்கொள்ள வேண்டியிருந்தது. ஆகப் பழந்தமிழர் கொண்ட போரெல்லாம் நின்று தங்கிய போரே அல்லாது சென்று தாக்கிய போர் அன்று.”[4] என்று தனது முன்னுரையில் கூறுகிறார். ஆனால் சங்க இலக்கியத்தில் நிகழ்ந்த போர்கள் அனைத்தும் தமிழர்கள் தமிழர்களோடு நடத்திய போர்தானே தவிர அவர் மற்ற இனத்தாருடன் போர் நடத்தியதாக எங்கும் இல்லை. சேரன் சோழனுடன் போர்; பாண்டியன் சேர சோழனுடன் போர்; சோழன் சோழனுடனேயே போர் என்று அனைத்தும் தம் இனத்தாருடன் நடத்திய போர்களாகவே உள்ளன.

**போர் அறங்கள்**

போரின் போது மக்கள் மடிவது தவிர்க்க முடியாதது ஆதலால் யாருமற்ற ஒரு பொது இடத்தில் போரை நடத்த வேண்டும் என்பது மரபு. அதனால் தான் போருக்கான ஆயத்தம் என்பது போர் ஆரம்பிப்பதற்கு முன்பே தீர்மானிக்கப்பட வேண்டும். யுத்தத்திற்கான வீரர்களைத் தேர்ந்தெடுப்பது; அவர்களின் திறமைக்கேற்பப் பதவிகள் கொடுப்பது; எந்த வீரனை எந்த இடத்தில் இருக்கச் செய்ய வேண்டும் போன்ற அனைத்தும் போருக்கான ஆரம்பத்தில் தீர்மானிக்கப்படவேண்டும். சங்க கால அரசர்கள் நிகழ்த்திய போர்கள் அனைத்தும் அறவழியில் நிகழ்ந்தன என்பதற்கு,

*ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்*
*பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்*
*தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்*
*பொன்போற் புதல்வாப் பெறாஅ தீரும்*
*எம்மம்பு கடிவிடுது நும்மரண் சேர்மின் (புறம்.9: 1-5)*

என்னும் நெட்டிமையாரின் பாடலை இன்றளவும் சான்றாகக் கூறுகின்றனர். மக்களைப் பாதுகாப்பான இடங்களுக்குச் செல்ல அறிவுறுத்தி விட்டுப் போர் செய்யும் தமிழரின் மரபைப் பற்றி இப்பாடல் விளக்குகின்றது. வெற்றி மட்டுமே படையெடுக்கும் மன்னனின் நோக்கமாக இருக்கக்கூடாது என்னும் உயரிய நோக்கம் இக்கவிதையில் வெளிப்படுகிறது. ஆனால் இப்பாடல் தொகுக்கப்பட்டுள்ள இதே புறநானூற்றில் வேறு சில பாடல்களில் உள்ள



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018 Available at: www.ijtlls.com



செய்திகள் இக்கருத்துக்கு அரண் சேர்ப்பதாக இல்லை. இப்பாடல் பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதியைப் பற்றியது. இப்பாடலின் அடுத்த அடியானது,

*அறத்தாறு நுவலும் பூட்கை மறத்தின்* (புறம்.9: 6)

என்று இம்மன்னன் அறநெறியைச் சொல்பவனும், வீரத்தினையுடையவனும் எனக் குறிப்பிடுகின்றார். இவ்வாறெல்லாம் இம்மன்னனைப் புகழ்ந்துரைத்த நெட்டிமையாரே இம்மன்னனின் கொடுஞ்செயல்களைக்,

*கடுந்தேர் குழித்த ஞெள்ள லாங்கண்*
*வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டிப்*
*பாழ்செய் தனையவர் நனந்தலை நல்வெயில்*
*புள்ளின மிமிழும் புகழ்சால் விளைவயல்*
*வெள்ளுளைக் கலிமான் கவிகுளம் புகளத்*
*தேர்வழங் கினைநின் றெவ்வர் தேஎத்துத்*
*துளங்கியலாற் பணையெருத்திற்*
*பாவடியாற் செறனோக்கின்* (புறம்.15: 1-8)

என்று புறநானூற்றுப் பாடலில் குறிப்பிடுகின்றார். மேலும், இப்பாடலில் ,,மன்னனே, பகைவருடைய அகன்ற இடத்தையுடைய நல்ல அரண்களை அழித்து அவ்விடத்தில் கழுதையேர் பூட்டி உழுது பாழ்செய்தாய். அவருடைய விளைநிலங்களில் தேர்களைச் செலுத்தி அழித்தாய். அவர்களின் காவல் மிகுந்த நீர்த்துறைகளில் உன் களிறுகளை நீராட்டிக் கலக்கி அழித்தாய்… என்று வென்ற மன்னன் தோற்ற மன்னனின் நாட்டையும், நாட்டுமக்களையும், இயற்கை வளங்களையும் அழித்த செய்தியைக் குறிப்பிடுகின்றார். போரின் மூலம் அம்மக்களின் வாழ்வாதாரத்தை அழித்து வென்ற மன்னர்கள் தமது போர் வெற்றியைக் கொண்டாடுகின்றனர். இதனால் இந்நாட்டின் இயற்கை மற்றும் செயற்கை வளங்கள் அனைத்தும் மிகக் கடுமையாகப் பாதிக்கப்படுகின்றன என்பதை அறியமுடிகிறது. இதே போன்ற கொடுமையினை இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியைப் பாடிய புறநானூற்றின் 16ஆம் பாடலும், தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியனைப் பற்றிய 6 மற்றும் 23ஆம் பாடல்களும் உணர்த்துகின்றன. இத்தகைய அழிவுகளைச் சங்ககால அரசர்கள் மட்டும் நிகழ்த்தவில்லை. போரில் வெற்றி பெற்ற அனைத்துத் தலைவர்களுமே நிகழ்த்தியுள்ளனர். இச்செய்திகளின் வழியாக மன்னர்களின் போர் நோக்கங்கள் அனைத்தும் பகைநாட்டு மக்களின் பொருளாதார அடிப்படைகளாக விளங்கும் விளைவயல்களை அழிப்பதும், பாதுகாப்பிற்கான அரண்களை அழிப்பதாகவும், நாட்டிற்குத் தீயிடுவதாகவும், நீர்நிலைகளைப் பாழ்படுத்துவதாகவும் இருந்துள்ளன என்பது தெளிவாகின்றது.

*எனைப்பல் யானையு மம்பொடு துளங்கி*
*விளைக்கும் வினையின்றிப் படையொழிந் தனவே*
*விறற்புகழ் மாண்ட புரவி யெல்லாம்*



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



*மறத்தகை மைந்தரொ டாண்டுப்பட் டனவே*

*தேர்தர வந்த சான்றோ ரெல்லாம்*

*தோல்கண் மறைப்ப வொருங்குமாய்ந் தனரே*

*......................................................*

*வேந்தரும் பொருதுகளத் தொழிந்தன ரினியே*

*என்னா வதுகொ றானே (புறம்.63: 1-6, 10,11)*

என்னும் பரணரின் பாடலானது சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன் மற்றும் சோழன் வேற்ப∴றடக்கைப் பெருவிறற்கிள்ளி எனும் இருபெரு வேந்தர்களும் போரிட்டதால் ஏற்பட்ட இழப்புகளைச் சுட்டுகின்றது. இவர்களிடம் எத்தனையோ யானைப் படைகள் இருந்தன. ஆனால் அவை அனைத்தும் அம்பால் வினை செய்யக்கூடிய வீரர்கள் அல்லாததால் அழிந்தன. குதிரைகளோ மிக்க புகழ் படைத்தன எனினும் தம்மைச் செலுத்தும் மறத்தகை மைந்தரோடு பட்டொழிந்தன. தேரேறி வந்த வீரர் அனைவரும் கேடகம் தாங்கிய கைகளோடே வீழ்ந்தழிந்தனர். நெடுவேல் மார்பில் பாய்ந்ததால் வேந்தர்களும் வீழ்ந்துபட்டனர். இவர்தம் அகன்ற நாடுகள் இனி என்னவாகும்... என்ற புலவரின் கேள்வியில் பாதி மனிதர்கள் போரில் அழிந்துவிட்டதால் அந்த நாட்டின் சமச்சீர்மை கெட்டுவிடுமே என்னும் கருத்தும் இப்பாடலில் உள்ளடங்கியுள்ளது.

பகலும் இரவும் எந்நேரமும் ஒரு நாட்டில் போர் நடந்துகொண்டே இருந்தால் அந்நாட்டில் எவ்வாறு மக்கள் நிம்மதியாக வாழமுடியும். அப்படி ஓர் அவலக்காட்சியை கருங்குழலாதனார் வெளிப்படுத்துகிறார்.

*எல்லையு மிரவு மெண்ணாய் பகைவர்*

*ஊர்சுடு விளக்கத் தழுவிளிக் கம்பலைக்*

*கொள்ளை மேவலை யாகலின் நல்ல*

*இல்லவா குபவா லியல்தேர் வளவ*

*தண்புனல் பரந்த பூசன் மண்மறுத்து*

*மீனிற் செறுக்கும் யாணர்ப்*

*பயன்றிகழ் வைப்பிற்பிற ரகன்றலை நாடே (புறம்.7: 7-13)*

என்னும் பாடலடிகளில் நீயோ இரவும் பகலும் அந்நாட்டு அரசர்களான பகைவர்களைப் போரிட்டு அழிக்கக்கருதி அவரின் ஊர்களைச் சுட்டெரித்ததால் அந்நாட்டுமக்கள் தனது அனைத்து நலன்களையும் இழந்து கெட்டனர் காண்... என்று ஒரு நாட்டையே தீயிட்டுக் கொளுத்துவதை வீரம் என்னும் பெயரில் கொண்டாடி மகிழ்ந்துள்ளனர்.

ஒரு போர் பல மனித வளங்களை அழிக்கும் திறனுடையது என்பதை ஔவையாரின் இப்பாடல் புலப்படுத்துகிறது.

*கடல்கிளர்ந் தன்ன கட்டூர் நாப்பண்*

*வெந்துவாய் வடித்த வேறலைப் பெயரித்*



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018 Available at: www.ijtlls.com



*தோடுகைத் தெழுதரூஉத் துரந்தெறி ஞாட்பின்*
*வருபடை போழ்ந்து வாய்ப்பட விலங்கி*
*இடைப்படை யழுவத்துச் சிதைந்துவே றாகிய*
*சிறப்புடை யாளன் மாண்புகண் டருளி*
*வாடுமுலை யூறிச் சுரந்தன*
*ஓடாப் பூட்கை விடலை தாய்க்கே (புறம்.295)*

என்ற இப்பாடலில் போரின் முடிவில் இருவர் திறத்தும் வீரர் பலர் வீழ்ந்து கிடந்தனர். வீழ்ந்த வீரர்கள் பலரும் பகைவரால் வேறுவேறாகத் துணிக்கப்பட்டனர். அவர்களிடையில் வயது முதிர்ந்த ஒரு தாயின் மகனும் கிடந்தான். அவனைக் காண அத்தாய் போர்க்களம் சென்று வீழ்ந்து கிடக்கும் வீரர்களுக்கிடையில் அவள் மகன் சிறப்பாக எதிரியுடன் பொருததன் பயனாக உடல் சிதைக்கப்பட்டுக் கிடந்ததைக் கண்டாள்… என்கிறார். இங்கு ஒரு தாய் மட்டுமே சுட்டப்படுகிறாள். ஆனால் வீழ்ந்து கிடக்கும் வீரர்கள் அனைவரும் தந்தையாகவும், அண்ணனாகவும், கணவனாகவும், மகனாகவும் பல்வேறு பொறுப்புகளில் இருப்பவர்கள். அவர்கள் இன்றி அந்தக் குடும்பம் என்னவாகும் என்பதற்குச் சான்றாகப் பின்வரும் பாடல் அமைகின்றது.

*அற்றைத் திங்க ளவ்வெண் ணிலவின்*
*எந்தையு முடையேமெங் குன்றும் பிறர்கொளார்*
*இற்றைத் திஙக ளிவ்வெண் ணிலவின்*
*வென்றெறி முரசின் வேந்தரெம்*
*குன்றுங் கொண்டார்யா மெந்தையு மிலமே (புறம்.112)*

எனும் பாரி மகளிரின் பாடலானது தம் தந்தை மற்ற வேந்தர்களுடன் போரிட்டு இறந்ததால் தந்தையும் இல்லாமல் சொந்த வீடும் இல்லாமல் அநாதைகளாகத் தனித்து விடப்பட்டதை விளக்குகிறது. மகளிரின் வீரத்தைப் பேசும் ஒக்கூர் மாசாத்தியாரின் பாடலில் முதல் நாள் போரில் தந்தையையும், அடுத்த நாள் போரில் தன் கணவனையும் பறிகொடுத்த பெண், இன்றும் போருக்கு அழைக்கும் பறையொலி கேட்டு, தன் ஒரே மகனைப் போருக்கு அனுப்பியதாக வரும் பாடல் இது.

*கெடுக சிந்தை கடிதிவ டுணிவே*
*மூதின் மகளி ராத றகுமே*
*மேனா ளுற்ற செருவிற் கிவடன்னை*
……………………………………………
*ஒருமக னல்ல தில்லோள்*
*செருமுக நோக்கிச் செல்கென விடுமே (புறம்.279)*

இப்பாடலில் நேற்று கணவனை இழந்தவள், அதற்கு முதல்நாள் தன் தந்தையைப் பறிகொடுத்தவள் இந்தச் சோகம் முற்றாக ஆறுவதற்கு முன்பாக இன்று தன் சிறுபிள்ளையின்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



கையில் வாளினைக் கொடுத்து அனுப்புகிறாள். இங்கு இந்தப் பெண்ணின் இழப்பின் வேதனை வீரம்... எனும் பெயரால் மறைக்கப்படுகிறது. போர்ச்சூழல் என்பது அக்காலத்தில் மக்களின் அன்றாட வாழ்வியல் நிகழ்வுகள். போருக்குச் செல்வதும் போருக்கு அனுப்பப்படுவதும் அங்கு இயல்பான நடைமுறை, ஆனால் அந்த நடைமுறைக்குள் அச்சமூகப் பெண்களின் துக்கத்தை வெளிக்காட்டுவதாக அடுத்த பாடல் உள்ளது.

*மாவா ராதே மாவா ராதே*
*எல்லார் மாவும் வந்தன வெம்மிற்*
*புல்லுளைக் குடுமிப் புதல்வற் றந்த*
*செல்வ னூரு மாவா ராதே*
*இருபேர் யாற்ற வொருபெருங் கூடல்*
*விலங்கிடு பெருமரம் போல*
*உலந்தன்று கொல்லவன் மலைந்த மாவே (புறம்.273)*

என்னும் பாடலானது போருக்குச் சென்ற அனைத்துக் குதிரைகளும் திரும்பிவிட்டன. ஆனால் அங்கு சென்ற தன் கணவனின் குதிரை மட்டும் வராததால் தன் புதல்வனோடு நின்று ஒரு தாய் அவனை எதிர்பார்த்துக் காத்திருந்து இறுதிவரை வராமல் போகவே தன் கணவன் இறந்தான் என்பதை உணர்ந்து வருத்தப்படுகிறாள்.

**போர் வெறியின் உச்சம்**

போரில் எதிரில் நின்றவரைக் கொல்வது வீரம் என்றால் அவனை அழித்தபின் போருக்கே வராத அம்மன்னனின் உறவினரையும், குழந்தையையும் தேடிப்பிடித்துக் கொல்வது போன்றவை போர்வெறியின் உச்சத்தைக் குறிப்பிடுகின்றன. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் தன் பகைவனான மலையமானைப் போரில் வென்றபின் அவனின் சிறு பிள்ளைகளைக் கொணர்ந்து யானையின் காலில் போட்டுக் கொல்லத்துணிந்த அவனின் வெறிச்செயலைக் கண்டு கோவூர்கிழார் பாடியதாக வரும் பாடல் இது.

*களிறு கண் டழூஉ மழாஅன் மறந்த*
*புன்றலைச் சிறாஅர் மன்றுமருண்டு நோக்கி*
*விருந்திற் புன்கணோ வுடையர்*
*கேட்டனை யாயினீ வேட்டது செய்ம்மே (புறம்.46)*

மேற்சுட்டிய நீயோ புறாவின் பொருட்டுத் தன்னையே வழங்கிய சோழன் மரபில் பிறந்துள்ளாய். இவர்களோ புலவர்கட்குப் பெருங்கொடை நல்கி வாழும் மலையமான் மரபினர். இவர் இப்பொழுது களிற்றைக் கண்டு அஞ்சுகின்ற சிறு பிள்ளைகள். நான் கூறியதைக் கேட்டாயாயின் நீ விரும்பியதைச் செய்வாயாக... என்கிறார்.

சிறுவர்களைக்கூட விட்டுவைக்காமல் அவர்களை அழிக்கத் துணிந்ததும், பகைநாட்டு மன்னனின் அரசவையிலிருந்து வந்தவர் என்பதற்காகவே வந்த புலவரை ஒற்றுக்காக வந்தவர் என்று அவரைக் கொல்லத் துணிந்ததும்ஆகிய செய்கைகள் பழந்தமிழ் நாட்டில் போர்வெறி



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



அளவில்லாமல் பெருகி இருந்ததை புறநானூறு குறிப்பிடுகின்றன. பதிற்றுப்பத்தின் பல பாடல்கள் வெற்றிக் கொண்டாட்டம் என்னும் பெயரால் வென்ற அரசர்கள் நடத்திய அழிவின் ஆவணங்களாய் விளங்குகின்றன. இதையே,"இரை தேடுதலின் பொருட்டுப் பயன்பட்ட உடல்வலிமை, எவ்விதப் பயனும் நோக்கமும் இல்லாத வெற்று இரத்தக்களறியில் இனக்குழுக்களின் அழிவில் ஒழிந்திருக்கக்கூடிய நிலையிலிருந்து மாறி „வீரம்... என்று போர்ச் சமூகத்தின் உயர் மதிப்பீடாக வளர்ச்சி பெற்றது" [5] என்பார் ராஜ்கௌதமன்.

**முடிவுரை**

மக்கள் இனம் இயற்கையோடு நிகழ்த்திய போராட்டத்தின் விளைவு தான் இவ்வுலகம். ஆதிகாலத்தில் போரானது உணவுத் தேவைக்காக மட்டுமே ஏற்பட்டது. உணவுத்தேவை தடையில்லாமல் நிறைவேறிய பின்பு மனிதன் மற்றவனுடன் போராட ஆரம்பித்தான். இப்போரில் வெற்றி பெற்றவன் தலைவன் என்னும் நிலைக்கு உயர்த்தப்பட்டான். வெற்றி பெற்ற பெருமித உணர்வால் அவன் மீண்டும் போர் செய்யும் மனநிலைக்குத் தள்ளப்பட்டான். மக்களினம் மக்களினத்தோடேயே போராடுவது என்பது அழிவுக்கு வழிவகுத்தது என்றாலும் அப்போர் இன்று வரை ஓயவில்லை. சங்கச் சமூகத்தில் போர் என்பது மிக இயல்பான நடைமுறையாக உள்ளது. ஆண்கள் தங்களின் உடல்வலிமையின் வெளிப்பாடாகவும், உணர்வின் எல்லையாகவும் போரை வகுத்துள்ளனர். உணவு தேடுதலுக்காகப் பயன்படுத்தப்பட்ட உடல்வலிமை இறுதியாக மானம், வீரம் என்ற இறுதி நிலைகளின் அடிப்படையாக சங்ககாலத்தில் இருந்துள்ளது. இனக்குழுக்களுக்கிடையில் பெரும் அழிவு தோன்றுவதற்கு எட்டு காரணிகள் அறிஞர்களால் வகுக்கப்பட்டுள்ளன. மக்களினம் மக்களினத்தோடே போராடுவது என்பது அழிவுக்கு வழிவகுத்தது என்றாலும் அப்போர் இன்றுவரை ஓயவில்லை. புறப்பாடல்கள் அனைத்தும் வென்ற மன்னனின் வெற்றிச் சிறப்பை மட்டுமல்லாமல் தோற்ற மன்னனின் நாடு படும் அவலங்களையும் எடுத்துக்கூறுகின்றன. புறநானூற்றின் பிற்பகுதிப் பாடல்கள் போரினால் மனிதர்கள் படும் துன்பங்களை எடுத்துக்கூறுகின்றன. புரவலனை இழந்த புலவர், கணவனை இழந்த மனைவி, தந்தையை இழந்த பிள்ளைகள், மகனை இழந்த தாய் என்று அவர்களின் வேதனை தொடர்கின்றது. போரில் ஈடுபடும் இரு நாடுகளில் ஒரு நாட்டுக்கு வெற்றியும் மற்றொரு நாட்டுக்குத் தோல்வியும் ஏற்பட்டாலும் உயிரிழப்பு என்பது இரு நாடுகளுக்கும் பொதுவானதாகும். போரின் மூலம் ஒரு நாட்டின் மனிதவளம் என்பது பெரிதும் குறைந்துவிடுகின்றது. போரின் விளைவுகள் குடும்பங்களை நிலைகுலையச் செய்தனவாக இருக்கின்றன என்பதைச் சங்க இலக்கியங்களின் வாயிலாக அறியமுடிகிறது.

**அடிகுறிப்புகள்**

1. கா.கோவிந்தன், பண்டைத் தமிழர் போர்நெறி, ப.7
2. வாழ்வியற்களஞ்சியம்
3. சு.வித்தியானந்தன், தமிழர் சால்பு, பக்.83-85



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018 Available at: www.ijtlls.com



4. தொல். புறத்.12

5. கா.கோவிந்தன், மேலது, முன்னுரை

6. ராஜ்கௌதமன், பாட்டும் தொகையும்- தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும், பக்.100-101

**துணைநூற்பட்டியல்**

1. இளம்பூரணர் (உ.ஆ), தொல்காப்பியம் பொருளதிகாரம், கழக வெளியீடு, சென்னை, 1970.

2. கா.கோவிந்தன், பண்டைத் தமிழர் போர்நெறி, வள்ளுவர்பண்ணை, சென்னை,1984.

3. சு.வித்தியானந்தன், தமிழர் சால்பு, பாரி புத்தகப்பண்ணை, சென்னை,1971.

4. ராஜ்கௌதமன், பாட்டும் தொகையும்- தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும், தமிழினி பதிப்பகம், சென்னை, 2016.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



# பட்டினப்பாலையில் சுற்றுச்சூழலியல் சிந்தனைகள்

முனைவர் தி.பரிமளா,
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
மன்னர் திருமலை நாயக்கர் கல்லூரி,
மதுரை.

உயிரினங்கள் அடிப்படை ஆதாரமான இவ்உயிர்க்கோளம் தனித்தன்மை வாய்ந்தது. மனிதர்கள், விலங்குகள், பறவைகள் தாவரங்கள் மட்டுமல்லாமல் கண்களுக்குத் தெரியாத பல நுண்ணுயிர்கள் வாழும் தன்மை கொண்டது. சூரியக் குடும்பத்தில் உள்ள கோள்களில் பூமியைத் தவிர வேறு எந்த கோளிலும் உயிரினங்கள் இருப்பதாகத் தெரியவில்லை. அதன் காரணமாகவே இந்த பூவுலகினை 'உயிர்க்கோளம்'(டீழைளிநசந) என்று அழைக்கின்றோம். நிலம், நீர், காற்று, ஆகாயம், தீ என்னும் ஐம்பூதங்களும் வளர்ச்சியாலும் இவை மாசடைந்து உலகில் எங்காவது ஓரிடத்தில் பேரழிவை ஏற்படுத்துகின்றன. இப்பேரழிவுகள் மனிதர்களால் உருவாக்கப்பட்டவை. அனைத்தும் ஒரு பொருட்டல்ல என்பதை உணர்த்தி விட்டது. உயர்வான பூமியைப் பாதுகாக்க வேண்டும் என்ற விழிப்புணர்வு ஏற்பட்டுள்ளது. சுற்றுச்சூழலைப் பாதுகாக்க வேண்டும் என்பதில் உலக நாடுகள் முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளை எடுத்து வருகின்றன. பாடப்பிரிவின் ஒரு அங்கமாக சுற்றுச்சூழல் உள்ளது. ஜீன் 5 உலகச் சுற்றுச்சூழல் தினமாக கொண்டாடப்பட்டு வருகிறது. 'சுற்றுச்சூழல்' என்பது இன்று புதிதாக மனிதகுலம் கண்டுபிடித்த ஒன்றல்ல. உயிரினங்களின் தோற்றமே சுற்றுச்சூழலின் அடிப்படையில்தான் உருவானது.

### தொல்காப்பியரின் திணைக் கோட்பாடு

தொல்காப்பியர் காலத்தில் அவருக்கு முற்பட்டக் காலத்திலும் திணை என்னும் தனிநெறி கடைபிடிக்கப்பட்டுள்ளது. திணை என்னும் சொல் 'ஒழுக்கத்தையும்' உயிரினங்கள் வாழும் 'நிலத்தையும்' சேர்த்து குறிப்பிடுகிறது. இலக்கியத்தின் பின் காட்சிப்புலனாக இயற்கையே இருந்தது என்பதற்கு சங்க இலக்கியங்களே சான்றாகும்.

*மாயோன் மேய காடுறை உலகமும்*
*சேயோன் மேய மைவரை உலகமும்*
*வேந்தன் மேய தீம்புனல் உலகமும்*
*வருணன் மேய பெருமணல் உலகமும்*
*முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்*
*சொல்லிய முறையால் சொல்லவும் படுமே* [1]

எனும் தொல்காப்பிய நூற்பாவே சுற்றுச்சூழல் பாகுபாட்டிற்கான சான்றாகும். தொல்காப்பியர் கூறும் கருப்பொருள் பாகுபாடும் ஒப்பு நோக்கத்தக்கதாகும். ஏனெனில் இடத்தாலும் காலத்தாலும் தோன்றுவது கருப்பொருள். உணவு, விலங்கு, மரங்கள், பறவைகள், தொழில்,



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



பூக்கள், நீர்நிலைகள், இசை மற்றும் இசைக்கருவிகள் இவை அந்நிலத்தினை அடிப்படையாகக் கொண்டது.

இசை சார்ந்த தெய்வ வழிபாட்டு மரபுகளும் நிலம் சார்ந்ததே. இத்தகையச் சிறப்பு வாய்ந்த உயிரினத் தோற்றத்திற்கு முதன்மையாகிய இயற்கையை அழித்து விட்டு எதுவும் பூமியில் நிலைத்து நிற்க முடியாது. இயற்கை அழிப்பு என்பது இன்று உடனே நிகழும் நிகழ்ச்சியல்ல. மனித இனம் என்று அறிவு வளர்ச்சி அடைந்து புதிய கண்டுபிடிப்புகளில் ஆர்வம் காட்டத் தொடங்கியதோ அந்த முதல் மனிதனில் இருந்து தொடங்குகிறது உலகின் அழிவு.

பட்டினப்பாலையில் சுற்றுச் சூழலியல் சிந்தனைகள்

இலக்கியங்கள் தமிழ் மக்களின் காதலையும், அறத்தையும், வீரத்தையும் போற்றுகின்றது. அரசர்களின் படையெடுப்பையும், மறவரின் வீரத்தையும் பெருமிதமாகக் குறிப்பிடுவதற்கு அவை கூறும் காட்சிகள் பகை நாட்டின் அழிவு, பகைநாடும் மனிதர்களும் பிற உயிரினங்களும் வாழும் பூமி என்பதை மறந்து அவற்றின் அழிவை நமக்குக் காட்டுகிறது. இன்றும் உலகில் எங்காவது நாடுகள் தங்களுக்குள் போரிட்டு அழிவதைக் காண முடிகிறது. இதனால் நிலம், நீர், காற்று, ஆகாயம் என்று அனைத்தும் மாசுபாடு அடைகிறது. அந்த வகையில் பட்டினப்பாலையின் வரிகளில் சுற்றுச்சூழல் மாசுபாட்டை அறியமுடிகிறது.

1. மண் மாசுபாடு
2. காற்று மாசுபாடு
3. ஒலி மாசுபாடு
4. இயற்கை அழிப்பு
5. போரினால் ஏற்படும் அழிப்பு
6. நகரமயமாதல்

என்று பிரித்துக் காணலாம்.

**மண் மாசுபாடு**

'சோழ நாடு சோறுடைத்து' என்பது புலவர் கூற்று. அச்சோழநாட்டில் அட்டிற் சாலைகள் நிறைந்து கிடக்கும். அவ்வட்டிற் சாலைகளினால் ஏற்படும் சுற்றுச்சூழல் மாசுபாட்டை இப்பகுதி கூறுகிறது. புலிப்பொறி பொறித்த கதவுகளை உடைய, வாழும் காலத்தில் புகழும், மறுமைக்கு ஆக்கமும் தரக்கூடிய அட்டிற் சாலைகள் சோழ நாட்டில் நிறைந்து கிடந்தன. இவ்வட்டிற் சாலைகளில் சோறுவடித்து கொட்டப்பட்ட கொழுவிய கஞ்சி தெருக்களில் ஆறுகள் போன்று ஓடின. அக்கஞ்சியினைப் பருக வந்த காளைகள் தங்களுக்குள் மோதிக்கொண்டதனால் சேறாகி அச்சேற்றின் மீது பல தேர்களும் ஓடுவதால் அச்சேறு துகள்களாய்க் காற்றில் பரவி தெருக்களில் வெண்மை நிறம் பூசப்பட்ட அரண் மனையின் மீது



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



பரவியது. அவ்வரண் மனைகள் பார்ப்பதற்குப் புழுதியை மேலே பூசிக்கொண்ட களிறுபோல் அழுக்கோடு காட்சியளித்தது. என்பதனை

*புலிப்பொறிப் போர்க்கதவின்*
*திருத்துஞ்சுந் திண்காப்பிற்*
*புகழ்நிலைஇய மொழிவளர*
*அறநிலைஇய அகனட்டிற்*
*சோறுவாக்கிய கொழுங்கஞ்சி*
*யாறுபோலப் பரந்தொழுகி*
*ஏறுபோரச் சேறாகித்*
*தேரோடத் துகள்தெழுமி*
*நீறாடிய களிறுபோல* [2]

என்று அட்டிற்சாலைகளால் தெருக்களிலும் வீடுகளும் இருந்த நிலையைக் குறிக்கிறது.

**காற்று மாசுபாடு**

சோழநாட்டில் காவிரிப் பூம்பட்டினத்தில் தவம் செய்வோர் பலர் தவப்பள்ளிகளில் வாழ்ந்து வந்தனர். அவர்கள் தீ வளர்த்து அத்தீயில் நெய் முதலியவற்றையிட்டு வளர்த்தனர். அதனால் எழும் புகை அங்கிருந்த பூம்பொழிலை நிறைத்தது. அங்கு வாழும் குயில்கள் அப்புகையை வெறுத்து தம் பேடைகளுடன் அவ்விடத்தை விட்டு நீங்கி, தீயோர்கள் வருவதற்கு அஞ்சும், பூதம் காக்கும் அச்சமுடைய இடத்தில் அங்கு வாழும் புறாக்களுடன் சென்று தங்கும்.

*தவப்பள்ளித் தாழ்காவின்*
*அவிர்சடை முனிவர் அங்கி வேட்டும்*
*ஆவுதி நறும்புகை முனைஇக் குயில்தம்*
*மாயிறும் பெடையோ டிரியல் போகிப்*
*பூதங் காக்கும் புகலருங் கடிநகர்த்*
*தூதுணம் புறவொடு துச்சிற் சேக்கும்* [3]

என்று கூறுகிறது. புறாக்கள் கோவில் மற்றும் பெரிய அரண்மனைகளின் மாடங்களில் வாழக்கூடாது. குயில்கள் அடர்ந்த மரங்கள் இருக்கும் இடங்களில் வாழக்கூடியது. தாபதர்கள் எழுப்பிய வேள்விப்புகையில் தங்கள் இருப்பிடத்தையே இப்பறவைகள் மாற்றிக் கொள்கின்றன. இன்றைய காலத்திலும் கடல்கடந்து பல பறவைகள் இனப் பெருக்கத்திற்காக தமிழகம் வருகின்றன. இப்பறவைகளின் வருகையால் சிறப்புப் பெற்ற ஊர்களும் உண்டு. நீர்நிலைகள் வறண்டு போகும் பொழுது காலநிலை சரியில்லாத பொழுதும் அவை இடமாறி விடும் என்பதை அறிந்து கொள்ளலாம்.

**ஒலி மாசுபாடு**

விஞ்ஞான வளர்ச்சியில் உருவான ஆலைகளின் சங்கொலி, போக்குவரத்து


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018 Available at: www.ijtlls.com



வாகனங்களில் ஏற்படும் ஓசை நாம் அன்றாடம் பயன்படுத்தும் பொருட்களில் ஏற்படும் ஓசை குறிப்பிட்ட அளவில் இருக்க வேண்டும். இதனை அறிவியலார் டெசிபல் என்ற அளவில் குறிப்பிடுகின்றனர். இவை அளவுக்கு மீறும் பொழுது காது கேளாமை, இதயக் கோளாறுகள் ஏற்படுகின்றன. இவ்ஒலி அளவு கூடும்பொழுது துன்பம் ஏற்படுவது மனிதர்களுக்கு மட்டுமல்ல பறவைகளுக்கும் ஏற்படும். இன்றும் பறவைகள் வசிக்கும் இடங்களுக்கு அருகில் ஓசையை ஏற்படுத்தினால் அவை பயந்து பறந்து செல்வதைக் காணலாம்.

*மலர்தலை மன்றத்துப் பலருடன் குழீஇக்*
*கையினுங் கலத்தினு மெய்யுறத் தீண்டிப்,*
*பெருஞ்சினத்தாற் புறக்கொடாஅது*
*இருஞ்செருவின் இகல் மொய்ம்பினோர்*
*கல் எறியும் கவண் வெரீஇப்*
*புள் இரியும் புகர்ப் போந்தை* [4]

எனும் பாடல் பூம்புகாரின் மணற் பரப்பில் பழைய மரம் காணப்படுகிறது. போர்ப்பயிற்சி மேற்கொள்ளும் மறவரது களம் உண்டு. அங்கு செருக்குடைய பரதவர் குலத்தில் தோன்றிய சிறுவர்கள் பொழுது போக்க, விளையாட்டினை மேற்கொள்ளும் போது, தங்களுக்குள் ஏற்பட்ட மாறுபாடு காரணமாக அவ்விளையாட்டின் காரணத்தால் பகைத்த வீரர்கள், புறமுதுகிட்டு ஓடாமல், கையால் குத்தியும், படைக் கருவிகளால் வெட்டியும், ஒருவர் உடலுடன் ஒருவர் உடல் பொருந்தியும் போர் புரிவர். கவணில் கல் வைத்து பனை மரங்கள் மீது எறிவர். இதனால் பனைமரங்கள் வடுக்களாய்க் காட்சியளிக்கும். பனை மரங்களில் ஏற்படும் அதிர்வு காரணமாக அங்கு வாழும் பறவைகள் அஞ்சி வேறு இடம் செல்லும் என்று கூறுகிறது. ஆனால், இன்றைய பரபரப்பான சூழலில் மனிதர்களோடு பறவைகளும் வாழப்பழகிக் கொண்டன.

**போரினால் ஏற்படும் இயற்கை அழிப்பு**

உலகின் எங்காவது ஓரிடத்தில் போரினால் அழிவு ஏற்பட்டுக் கொண்டே இருக்கிறது. போர் ஏற்படும் பொழுது அந்நாட்டில் உள்ள இயற்கை வளம் முதலாக அழிக்கப்படுகிறது. அங்கு வாழும் மக்கள் உறவுகளை இழந்து தவிக்கின்றனர். பிற நாடுகளில் அகதிகளாக வாழவேண்டியுள்ளது. நவீன ஆயுதங்களால் இன்று நம்மை நாமே அழித்துக் கொண்டிருக்கிறோம். இவை இல்லாத காலத்தில் கற்காலக் கருவிகளால் போரிட்டு அழித்துக் கொள்வோம் என்பதற்கு திருமாவளவனின் உழிஞைப்போர் சான்றாகும்.

திருமாவளவனின் படைகள் பகைவர்களின் நாட்டை அழித்து விடும் தன்மை கொண்டது. திருமாவளவனின் படைகள் பகைவர் நாடு சென்றதால் கரும்புகளும், செந்நெல்லும் வளர்ந்து, குவளை மலர்களும் நெய்தலும் மலர்ந்து முதலைகள் திரியும் அகன்ற பொய்கைகளைக் கொண்ட மருதநிலமாகும். அந்நிலத்தில் உள்ள மக்களைத் திருமாவளவன் குடிபெயர்ந்து ஓடும்படிச் செய்தான். அப்பகுதிகளில் வயல்களும்,



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018 Available at: www.ijtlls.com



பொய்கைகளும் நீரற்று வறண்டு கிடந்தன. அப்பகுதிகளில் சிறுபூளை, பெரும்பூளை பூக்களும் கொழுத்த தண்டுகளைக் கொண்ட அறுகம் புல்லும், கோரைகளும் வளர்ந்தன. பகடுகள் மேய்ந்த இடங்களில் பெண் மான்களும், ஆண் மான்களும் துள்ளி விளையாடின.

திருமாவளவனால் சிறைபிடிக்கப்பட்ட பகை மன்னர்களின் உரிமை மனைவியர் பலரும் நீர் உண்ணும் துறைகளில் நீராடி அம்பலங்களை மெழுகிட்டுத் தூய்மைப்படுத்துவர். மாலை நேரங்களில் அம்பலங்களில் உள்ள விளக்குகளை ஏற்றி, தெய்வம் உறையும் தறிகளுக்கு சூட்டி வழிபாடு செய்வர். இவ்வாறு, பெண்கள் போரினால் கைதிகளாக்கப்பட்டு சிறை பிடிக்கப்பட்டதைக் கூறுகிறது.

திருமாவளவன் போர் புரிந்த பகைவர் நாடுகளில் உள்ள அம்பலங்களில் தெய்வம் உறையும் நெடிய தூண்களில் பெரிய களிறுகளும் பிடிகளும் கட்டப்பட்டு அவை தூண்களில் உரசியதால் சாய்ந்தன. அதாவது வேலைப்பாடமைந்த பகைவர் அம்பலங்கள் இடிந்தன.

பகைவர் நாட்டில் கூத்தரின் முழவோசைக்கு ஏற்ப இனிய யாழின் இசையைக் கேட்டு மகிழும் திருநாள் நடைபெறுவதில்லை. அதன் காரணமாக சிறிய பூக்களையுடைய நெருஞ்சியும் அறுகம் புல்லும் மிகுதியாக வளர்ந்திருந்தன. கொடிய நரிகள் ஊளையிடும் இடமானது கூகைகளும் தன் இனத்தைக் கூவி அழைக்கும் இடமாயின. பிணத்தைத் தின்னும் ஆண் பேய்களும், பெண் பேய்களும் அவ்விடத்தினைச் சூழ்ந்தன. விருந்தினர்கள் குழுமியிருந்த பெரிய வீடுகளில் திண்ணைகளும் பெரிய அடுக்களைகளையும் கொண்ட ஊராது திருமாவளவன் போருக்குப் பின்னர் செருப்பு அணிந்த கால்களையும், வில்லினையும் உடைய வேடர்கள் நெற்கூடுகளைக் கொள்ளையிட்டுச் செல்லும் நிலைக்கு ஆளானது. நெல் இல்லாத வெறுங்கூடுகளில் கூகைகள் பகலிலும் தங்கி தன் இனத்தை அழைக்கும் கடத்தற்கரிய காவலையுடைய மதில்களைக் கொண்ட பகைவர்களின் படைவீடுகள், அழகு அழியவும், அவர்கள் குலம் அழியவும், பெரிய அழிவை உண்டாக்கிய போதிலும் கரிகாலனின் செற்றம் அடங்கவில்லை என்பதை,

*செறுவும் மகளிர் உண்துறை மூழ்கி,*
*அந்தி மாட்டிய நந்தா விளக்கின்,*
*மலர்அணி மெழுக்கம், ஏறிப் பலர்தொழ,*
*வம்பலர் சேக்கும் கந்துடைப் பொதியில்*
*பருநிலை நெடுந்தூண் ஒல்கத் தீண்டி*
*பெருநல் யானையொடு பிடியுணர்ந்து உறையவும்*
*..அழல்வாய் ஓரி அஞ்சுவரக் கதிர்ப்பவும்*
*அழுகுரல் கூகையோடு ஆண்டலை விளிப்பவும்*
*கணம்கொள் கூளியொடு கதுப்பு இகுத்து அசைஇ*
*பிணம்தின் யாக்கைப் பேய்மகள் துவன்றவும்*
*..கொடுவில் எயினர் கொள்ளை உண்ட*


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018 Available at: www.ijtlls.com



*உணவுஇல் வறுங்கூட்டு உள்ளகத்து இருந்து*
*வளைவாய்க் கூவை நண்பகல் குழறவும்*
*அருங்கடி வரைப்பின் ஊர் கவின் அழிய*
*பெரும்பாழ் செய்தும் அமையான்* [5]

என்று திருமாவளவனது போரினால் பகைவர் நாடு அழிக்கப்பட்டதைக் கூறுகிறது.

**இயற்கை அழிப்பு**

இயற்கை வளங்கள் இரண்டு வகைகளில் அழிக்கப்படுகிறது. ஒன்று மனிதனால், இரண்டாவது இயற்கையால், இயற்கையாய் ஏற்படும் தீ விபத்தினால் காடுகள் அழிவது. இயற்கையால் ஏற்படும் அழிவுகள் குறைவு. மனிதர்கள் தங்கள் வளர்ச்சிக்கு இயற்கையை அழிப்பதே அதிகம். தொழிற்சாலைகள், நிறுவனங்கள் குடியிருப்புகள் மற்றும் பிற தேவைகளுக்காக காடுகளும் விளைநிலங்களும் அழிக்கப்படுகின்றன. ஒரு நாடு இன்னொரு நாட்டை ஆக்கிரமிப்பு செய்யும்பொழுது அங்கு தனது மக்களை குடிபெயரச் செய்யும். திருமாவளவனும் சோழ மண்டலத்தில், காடாக உள்ள இடங்களை அழித்துப் பண்டு போலக் குடிமக்கள் தங்கும் பகுதிகளாக்கினான். தூர்ந்த குளங்களைத் தோண்டி, நாட்டின் செல்வ வளத்தைப் பெருக்கினான். பேரிய நிலைகளையுடைய மாடங்களைக் கொண்ட உறந்தை என்னும் தன் ஊரைத் தலைநகராக்கினான். கோயில்களையும், பழைய குடிகளையும் பண்டு போல் நிலை நிறுத்தினான்.

*காடு கொன்று நாடு ஆக்கி,*
*குணம் தொட்டு வளம் பெருக்கி,*
*பிறங்கு நிலை மாடத்து உறந்தை போக்கி*
*கோயிலொடு குடிநிறீஇ*
*வாயிலொடு புழை அமைத்து*
*ஞாயில் தொறும் புதை நிறீஇ*
*பொருவேம் எனப் பெயர் கொடுத்து*
*ஒருவேம் எனப் புறங் கொடாது,*
*திரு நிலை இய பெருமன் எயில்* [6]

என்று திருமாவளவன் காடுகளை அழித்து நாடாக்கியதை பட்டினப்பாலை கூறுகிறது.

மனிதகுலம் இயற்கையோடு இணைந்து வாழ்ந்ததை முருகியல் உணர்வோடு கூறுவது சங்க இலக்கியங்கள். இயற்கை இல்லை எனில் உலகில் உயிரினங்கள் தனித்து வாழ முடியாது என்னும் சுற்றுச்சூழல் உணர்வை இன்று அனைவர் மனதிலும் விதைத்துள்ளது இயற்கை.

பட்டினப்பாலையின் பாட்டுடைத் தலைவனின் வீரத்தைப் புகழவந்த புலவர் கடியலூர் உருத்திரங் கண்ணனார் சுற்றுச்சூழல் சிந்தனைகளையும் நம்முன் விதைத்துச் செல்லுகிறார்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018 Available at: www.ijtlls.com



சுற்றுச்சூழலைப் பாதுகாப்பதன் அவசியத்தை நாம் சங்க இலக்கியத்தினைக் கற்பதன் மூலம் உள்ளார்ந்த சிந்தனைகளைப் பெற முடியும்.

**அடிக்குறிப்புகள்**

1. தொல். பொருள். நூ.951
2. பட்டி. 40-50 வரி
3. பட்டி. 53-59
4. பட்டி. 69-74
5. பட்டி. 239-270
6. பட்டி. 283-291

**பார்வை நூல்கள்**

1. பட்டினப்பாலை. திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,79, பிரகாசம் சாலை, சென்னை – 600 001.
2. மறைமலையடிகள். பட்டினப்பாலை ஆராய்ச்சியுரை, மறுபதிப்பு – 1966. திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி – 6. சென்னை – 1.
3. தர்மராஜ், ஜே. சுற்றுச்சூழல் இயல், மு.ப. – 2004. டென்சி பப்ளிகேஷன்ஸ், டென்சி வில்லா 6/229, அண்ணாமலையார் காலனி,
4. தமிழண்ணல். தொல்காப்பிய உரை, மு.ப. – ஏப்ரல் 2008.மீனாட்சி புத்தக நிலையம், மயூரா வளாகம், 48, தானப்ப முதலிதெரு, மதுரை – 625 001.


International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com


# சிலம்பில் பள்ளு இலக்கியத்தின் வித்து

**முனைவர்.வெ.பிரபாவதி,**
**உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,**
**வே.வ.வன்னியப் பெருமாள் பெண்கள் கல்லூரி,**
**விருதுநகர்.**

சங்ககாலந்தொட்டு இருபதாம் நூற்றாண்டளவும் எழுந்து வாழ்ந்து வரும் அனைத்து இலக்கிய நூல்களுமே மக்கள் இலக்கியங்கள் என்னும் சிறப்பிற்குரியன. இம்முறையில் சங்கஇலக்கியங்கள் சங்ககாலத்து மக்கள் இலக்கியங்களாகவும்இ இடைக்கால இலக்கியங்கள் அக்கால மக்கள் இலக்கியங்களாகவும் சிற்றிலக்கியங்கள் பிற்காலத்து மக்கள் இலக்கியங்களாகவும் திகழ்கின்றன. அதனால் அனைத்து இலக்கியங்களும் மக்கள் இலக்கியங்களே ஆகும். கி.பி 16ம் நூற்றாண்டு முதல் எழுந்த மக்கள் இலக்கியங்களில் பள்ளு இலக்கியங்களும் ஓர் வகையாகும். அந்தக் காலத்துக்குரிய மொழியமைப்புக்களையும் வாழ்வியல் பண்பாடுகளையும் சமுதாய நெறிமுறைகளையும் தாங்கியனவாக இப்பள்ளு இலக்கியங்கள் விளங்குகின்றன. இப்பள்ளு இலக்கியத்தின் வித்தினை நாம் தொல்காப்பியத்திலே பார்க்கமுடிகிறது. இருப்பினும் அதற்கு பின் தோன்றிய சிலம்பில் பள்ளுவின் இலக்கியக் கூறுகளை அதிகம் பார்க்க முடிகிறது. முத்தமிழ்க்காப்பியமான சிலப்பதிகாரத்தில் காணப்படும் சிற்றிலக்கிய நூலான பள்ளு இலக்கியத்தின் கூறுகளை எடுத்தியம்புவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**சிலம்பு - பள்ளு அறிமுகம்**

முத்தமிழ்ப் புலமையும், வித்தகக் கவித்திறனும் வாய்ந்த இளங்கோவடிகளால் இயற்றப்பட்டதே சிலப்பதிகாரம். முத்தமிழ்இ மூன்று நாடு, மூன்று நகரம், மூன்று காண்டம், மூன்று உண்மைகள், முப்பது காதைகள் என்று இளங்கோ மூன்றுக்கு முக்கியத்துவம் கொடுத்துப் பாடியிருப்பது இதன் தனிச்சிறப்பாகும். சிலம்பில் அக்காலத்திய உழவு, வாணிகங்களில் மேம்பாடு, தொழில் பெருக்கம், குடிகளின் ஒழுக்கம், அரசியல் குறித்த பல செய்திகளைக் காணமுடிகிறது. மேலும் பள்ளு எனும் சிற்றிலக்கியம் பின்னாளில் உருவாக அதற்கான வித்து சிலம்பில் ஊன்றியிருக்கும் பான்மையை பலவிடங்களில் காணமுடிகின்றது.

‘பள்’ என்பது உழவர்களில் ஒரு சாதியினரைக் குறிக்கிறது. அவர் தம் வாழ்வியல் பற்றி விளக்கும் இலக்கியத்திற்கு இப்பெயராயிற்று. இயல், இசை, நாடகம் என்னும் முப்பெரும் பிரிவில் பள்ளு இலக்கியங்கள் நாடக இலக்கியங்களாகக் குறிப்பிடப்படும் சிறப்புடையவை. படிக்கவும், நடிக்கவும் வாய்ப்பாக அமைந்தமையால் இந்நூல்கள் நாடக இலக்கியங்களாகக் கூறப்பட்டுள்ளன. பள்ளு இலக்கியங்களுக்கு உழவர் பெருமக்களின் வாழ்வியல் நிகழ்ச்சிகள் கருப்பொருளாயின. பயிர்த்தொழில் செய்யும் உழவரும், உழத்தியரும் களைப்பு ஏற்படாதிருக்க பாடியும், ஆடியும் தம் வாழ்க்கையை ரசமாக அனுபவித்து வந்தனர். அவை வாய்மொழி பாடல்களாகவே இருந்தன. புதுநூல்கள் செய்வதில் ஊக்கம் கொண்டிருந்த



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018 Available at: www.ijtlls.com



கவிஞர்கள் இப்பாடல்களைத் தாமும் அனுபவிக்கத் தொடங்கி தங்களின் தெளிந்த தமிழில் இவைகளை இலக்கியமாக்கி விட்டார்கள். ஆராய்ந்து நோக்கின் பள்ளு முதலிய சிற்றிலக்கியங்கள் உருப்பெற்றமைக்குரிய காரணங்கள் இவையே ஆகும்.

**உழவுப்பாடல்கள்**

தமிழகத்தில் தொன்மைக்காலம் முதல் நடைபெற்று வரும் தொழில் உழவுத்தொழில்.இத்தொழிலில் தலையாய தொழில் பயிர்ச் சாகுபடி. உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் என்ற குறிக்கோள் கொண்டது பண்டைய சமுதாயம். உழவுத்தொழிலில் ஈடுபட்ட விரர்களை மள்ளர்கள்இ களமர்கள்இ உழவர்கள் என்னும் பெயரால் இலக்கியங்கள் இயம்புகின்றது. சிலப்பதிகாரம் பணி செய்யும் உழவர் பெருமக்கள் பாடி மகிழ்ந்த சில வகை குழுப்பாடல்களைப் பற்றிய குறிப்புக்களைத் தாங்கியிருப்பதை இவண் நோக்கலாம்.

**விருந்திற்பாணி**

உழத்தியர் கழனிகளில் இறங்கி நாற்று நடுங்காலை மதுவுண்ட மயக்கத்தோடு பண்ணோடு சேர்ந்து பாடல்களைப் பாடி மகிழ்வர். இச்செய்தியைஇ

*கடி மலர் களைந்து முடிநாறழுத்தி*
*தொடிவளைத் தோளும் ஆகமும் தோய்ந்து*
*சேறாடு கோலமொடு வீறு பெறுத் தோன்றிச்*
*செங்கய னெடுங்கட் சின்மொழிக் கடைசியர்*
*வெங்கட் டொலைச்சிய விருந்திற்பாணியும்* [1]

எனும் சிலப்பதிகார அடிகள் விளக்கி நிற்கின்றன. உழத்தியர் பாடும் இப்பாடல் 'விருந்திற்பாணி' என்னும் பெயரது.விருந்திற்பாணி என்பதற்குப் 'பண் நிறத்திற் சேர்ந்து பழகிப் போகாத பாட்டு' என்று அடியார்க்கு நல்லார் உரை வரைவர். மேலும் தம் இசையில் புதுமையுண்டாகப் பாடும் பாட்டெனினும் அமையும் என்று கூறி இதனைப் பெருமுளை என்பாரும் உளர் என்றும் விளக்குவர். இதனை அடியொற்றி முக்கூடற்பள்ளுவில் உழவர்களுள் ஒரு பள்ளன் மதுவுண்ட மயக்கத்தால் நடவு வயலிலே நிலைதடுமாறிப் போக அதனைக் கண்டுஇ

*வடிக்கும் மதுவைக் குடிக்கும் ஆசை*
*மயக்கமும் பெருந்தியக்கமும்*
*வரம்பிற் பாய்ந்து பரம்பிற் சாய்ந்த*
*வாட்டமும் முகக் கோட்டமும்* [2]

என பள்ளி ஒருத்தி மற்றவர்களிடம் சொல்லி நகையாடுவதைக் காணமுடிகிறது.

**ஏர்மங்கலம்**

வயலில் முதன்முதலாக ஏர்பூட்டுவதைப் 'பொன்னேர் பூட்டுதல்' அல்லது 'நாளேரிடல்' என்னும் கலைச்சொற்களால் குறிப்பர். செந்நெல் கதிரும் அறுகம்புல்லும் குவளைமலரும் கலந்து தொடுக்கப்பட்ட மாலையைப் பொன்னேர் பூட்டி நிற்கும் உழவர் தங்கள் மேழியிலே



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



சூட்டி மகிழ்வர்.ஏரைப் போற்றித் துதிக்கும் பாடலைப் பாடுவர். இங்ஙனம் பொன்னேர் பூட்டும் உழவர் ஏரைப் போற்றிப் பாடும் பாடல் ஏர்மங்கலம் எனப்படும். இப்பெருங் கருத்தைஇ

"கொழுங்கொடி அறுகையும் குவளையும் கலந்து
விளங்கு கதிர்த் தொடுத்த விரியல் சூட்டிப்
ஏரொடு நின்றோர் ஏர்மங்கலமும்"[3]

என வரும் அடிகள் உணர்த்துகின்றன.இதை போலவே முக்கூடற்பள்ளுவிலும் சேரியிலேயுள்ள பள்ளர் எல்லாம் கூடிக் குரவையிட்டு ஏர்மங்கலம் பாடி நாளேர் பூட்டி உழவைத் தொடங்குவதை,

"கூத்தன் முதலாயுள்ள
பள்ளர் எல்லாம்
குரவையிட்டேரைப் பூட்டிக்
கூடியுழுதார்"[4]

என்பதன் வழி உணர்ந்து கொள்ளமுடிகிறது.

**முகவைப்பாட்டு**

உழவர்கள் நெல்லை அரிந்து போட்ட பின்னர் மாடுகளைப் பிணையல் பூட்டி அரிந்து போட்ட நெற்கதிர்களாகிய சூட்டின் மீது கடா விடுவர். இப்பொழுதில் உழவர்கள் பாடும் பாட்டு 'முகவைப்பாட்டு' என்னும் பெயருக்குரியது. உழவர்கள் பாடும் இம்முகவைப்பாட்டைப் பற்றி

*அரிந்து கால் குவித்தோர் அரிகடாவுறுத்த*
*பெருஞ் செய்ந்நெல்லின் முகவைப்பாட்டும்* [5]

என வரும் சிலப்பதிக்காரப் பகுதி விளக்கி நிற்கும். இம் முகவைப்பாட்டுக்குப் 'பொலிப்பாட்டு' என்றும் வேறு பெயர் உண்டு.இதையேஇ

*பொடிவைக்கோலைத் தவிர்ப்பார் பொலியைக் குவிப்பார்*
*பொலிதூற்றி ஆற்றிப்பொலி பொலியென்றளப்பார்* [6]

என்ற பள்ளு பாடலும் பொலிப்பாட்டின் செய்தியைச் சுட்டி நிற்கிறது.

**வரிக்கூத்துக்கள்**

சிலப்பதிகார உரையாசிரியராகிய அடியார்க்கு நல்லார் அரங்கேற்றுகாதை உரையில் பண்டைக்காலத்து நிலவிய பல்வேறு வரிக் கூத்துக்களைக் குறிப்பிட்டுள்ளார். வரிக்கூத்து என்பது அவரவர் பிறந்த நிலத்தன்மையும் பிறப்பிற்கேற்ற தொழில் தன்மையும் தோன்ற நடிக்கும் ஒரு வகைக் கூத்து. இதனைஇ

*வரி யெனப்படுவது வகுக்கும் காலைப்*
*பிறந்த நிலனும் சிறந்த தொழிலும்*
*அறியக் கூறி ஆற்றுழி வழங்கல்* [7]



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



என வரும் அடிகள் உணர்த்தும். குடிபெருமையை விளக்கும் பாடல்கள் பள்ளு இலக்கியத்தில் முதன்மையாக இடம் பெறுகிறது. பள்ளியர் இருவரும் தத்தம் குடிபெருமையைக் கூற முற்படுவதை,

*கள்ளப்புள் வாய்கிழித்த காரழகர் முக்கூடல்*

*கொள்ளத் தமது குடித்தரங்கள் கூறினரே*[8]

என்ற அடிகள் வழி உணர்ந்து கொள்ளமுடிகிறது.

வரிக்கூத்துக்கள் பற்றி கூறுகையில் அடியார்க்கு நல்லார் பழம்பாடலில் அழகுடையபள்ளிஇ ஆடும்படுபள்ளி என வரும் இரு வரிக்கூத்துக்கள் சுட்டப்படுதலைக் எடுத்துக்காட்டி விளக்குகிறார்.வரிக்கூத்துகளின் இயல்புகள் சரி வர புலப்படவில்லை எனினும் இவ்விரு வகைக்கூத்துக்களும் பள்ளர் பள்ளியர் வாழ்வோடு தொடர்புடையனவாயிருத்தல் வேண்டும் என்பது வெளிப்படை. இவற்றுள் அழகுடைய பள்ளி என்பது இளையப்பள்ளியின் அழகைப் பள்ளன் வியந்து பாடியாடும் ஒரு வகைக் கூத்தாகவும் ஆடும் படுபள்ளி என்பது மூத்தபள்ளியின் இயல்புகளை விளக்கிப் பாடியாடும் ஒரு வகைக்கூத்தாகவும் இருக்கலாம் என்று ஊகித்துரைப்பது ஒருவாறு பொருந்தும் என ந.வி.ஜெயராமன் கூறுகிறார்.ஆடும்படுபள்ளி என்பது பள்ளியரும் பள்ளரும் சேர்ந்து ஆடும் கூத்தெனவும் சிலர் கூறுவர்.இவற்றை வைத்துப் பார்க்கின் பள்ளர் பள்ளியர் வாழ்வோடு தொடர்புடைய பல்வேறு வரிக்கூத்துக்கள் முன்பு வழங்கி வந்தன என்பதையும் பிற்காலத்தில் பள்ளு இலக்கியம் தனியொரு சிற்றிலக்கியமாக உருப்பெற இத்தகைய வரிக்கூத்துக்களும் துணையாக விளங்கின என்பதையும் அறிய முடிகிறது.

**தொகுப்புரை**

- ❖ உழவர்களின் வாழ்வியலைக் கருப்பொருளாகக் கொண்டு பாடப்பட்டது பள்ளு எனும் இலக்கியமாகும்.
- ❖ பள்ளு இலக்கியத்தின் வித்தினை பழம் இலக்கியமான சிலப்பதிகாரம் வழி உணர்ந்து கொள்ள முடிகின்றது.
- ❖ பள்ளு இலக்கியங்களில் பள்ளியர் நடவின் போது 'நடுகைப்பாட்டு' பாடினர். இச்செய்தியினைச் சிலப்பதிகாரத்தில் இடம் பெறும் விருந்திற்பாணி மூலம் அறிந்து கொள்ளமுடிகின்றது.
- ❖ மேலும் ஏர்மங்கலம், முகவைப்பாட்டு முதலிய வேளாண்பாடல்கள் பிற்காலப் பள்ளு இலக்கியங்களின் வித்துகளாக விளங்குமாற்றை உணர முடிகின்றது.
- ❖ சிலப்பதிகாரத்தில் பல்வேறு வகையான கூத்துக்கள் இடம்பெறுகின்றன.அதில் இடம்பெறும் வரிக்கூத்து பள்ளு இலக்கியத்தில் காணப்பெறும் கூத்தாகும் என்பதையும் இவண் அறிய முடிகிறது.



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



- ❖ சிலம்பில் காணப்படும் பள்ளுவின் வித்தினை முக்கூடற்பள்ளு இலக்கியச் சான்றுகள் விளக்கி நிற்பதைக் காணமுடிகின்றது.
- ❖ ஆக இவற்றை நோக்குமிடத்து பள்ளு எனும் தனிபெரும் சிற்றிலக்கியம் உருவெடுக்க பெரும் காரணமாக அமைந்தது இப் பேரிலக்கியம் எனில் அது மிகையாகாது

**அடிகுறிப்புகள்**

1. சிலம்பு.நாடு காண்.127-131
2. முக்.கூ.ப.130
3. சிலம்பு.நாடு காண்.132-135
4. முக்.கூ.ப.115
5. சிலம்பு.நாடு காண்.136-137
6. முக்.கூ.ப.139
7. சிலம்பு.அரங்.காதை.24
8. முக்.கூ.ப.13

**துணை நூல்கள்**

1. வ.த.இராமசுப்பிரமணியம் (உ.ஆ,) சிலப்பதிகாரம், திருமகள் நிலையம், தி.நகர், சென்னை-17.
2. சிற்றிலக்கியச்செல்வங்கள்-ந.வீ.செயராமன்
3. முக்கூடற்பள்ளு-புலியூர் கேசிகன் உரை,சாரதா பதிப்பகம், சென்னை - 600014.



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



# தவ்வை சொல்லாட்சியும் வழக்குமுறையும்

**வி.விமல்,**
**உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,**
**மதுரைக்கல்லூரி,**
**மதுரை-11.**

தமிழ் இலக்கியப் பரப்பு மிக நீண்ட வரலாற்றை உடையது. காலம் தோறும் தன்னைத்தானே புதுப்பித்துக்கொள்ளும் ஆற்றல் பெற்ற மொழி தமிழ்மொழி. இதுவே தமிழின் நிலைத்த தன்மைக்கான காரணம். இந்த நெகிழ்வுத்தன்மை நல்லதே என்றாலும், காலப்போக்கில் சில சொற்கள் வழக்கிலிருந்து அழிந்தும் விடுகிறது. மேலும், இயல்பானபொருளில் இருந்து வேறுபொருளாக மாற்றமும் அடைந்து விடுகிறது. சிலசொற்களின் மாற்றம் பண்பாட்டுக் கூறின் அடிப்படையையே அசைத்து விடுகிறது. அவ்வாறு அமைந்த சொற்களில் ஒன்றான ‘தவ்வை’எனும் சொல்லாட்சியின் பொருளையும், தற்போது அச்சொல்லின் நிலைகுறித்தும் ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**தவ்வையின் வேறுபெயர்கள்**

ஜேஸ்டா, சேட்டா, சேட்டை, மாமுகடி, முகடி, மோடி, மூத்ததேவி, பழையோள், தூமாவதி, காக்கைகொடியோள், தூம்ரவராகி, தூம்ரகாளி, மாயை, மஹாநித்திரை, ஏகவேணி இவையெல்லாம் தவ்வையின் பெயர்களாகக் கூறப்படுகிறது. ஜேஸ்டா என்னும் வடமொழிச்சொல்லுக்கு வீட்டில் பிறந்த முதல் குழந்தையை ஆணாக இருந்தால் ஜேஸ்டபுத்திரன் என்றும், பெண்ணாக இருந்தால் ஜேஸ்டபுத்திரி என்றும் பெயர் சூட்டி அழைக்கும் வழக்கம் இன்றளவும் இருந்து வருகிறது. மலையாளத்தில் சேட்டா, சேட்டன் ஆகியசொற்கள் ஆண்களை அழைக்கும் சொல்லாக இருந்து வருகிறது. சங்க இலக்கியங்களில் தவ்வை சொல் மாமுகடி, முகடி, மோடி, கரியசேட்டை, மூதேவி, காக்கைகொடியோள், பழையோள் உட்பட பதினான்கு பெயர்களில் அழைக்கப்படுகிறது. அடாத செயல்களைச் செய்யும் குழந்தைகளை தூமரகாளி என்று திட்டுவதும் வழக்கத்தில் இருந்து வருகிறது. தலைவிரி கோலம் அமங்கலமாக கருதப்படுவதுபோல ஒற்றை சடையும் சமூக வழக்கத்தில் ஏற்றுக் கொள்ளப்படாததாக இருந்திருக்கலாம். சங்க இலக்கியங்களில் ஐம்பால் கூந்தல் அணிந்ததாக வருகிறது. இதற்கு ஐந்துவகையான (கொண்டை,குழல்,பனிச்சை,கால்,குளகம்) கொண்டைகள் என்றும் பொருள் கூறப்படுகிறது.

**புராணக்கருத்து**

தவ்வை சனீஸ்வரனின் மனைவி என்றும் இவர்களுக்கு மாந்தன் என்ற மகனும், மாந்தி என்ற மகளும் உள்ளதாகவும், மாந்தனை குளிகை என்னும் காலத்திற்கு அதிபதியாக சோதிடம் கூறுகிறது. மூதேவி வருணனின் மனைவி என்று சில தொன்மக் குறிப்புகள் குறிப்பிடுகின்றன. தேவர்களும், அசுரர்களும் பாற்கடலைக் கடைந்தபோது சீதேவிக்கு முன் எழுந்தவள் என்றும் கூறப்படுகிறது.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



**இலக்கியங்களில் தவ்வைசொல்லாட்சி**

தற்போது உவன், உவள் போன்ற சுட்டுச் சொற்கள் வழக்கத்தில் இல்லை. அதுபோலவே, நுவ்வை, அவ்வை, தவ்வை போன்ற சொற்களும் வழக்கொழிந்து விட்டன.

*விளையாடுஆயமொடுவெண்மணல் அழுத்தி,*
*மறந்தனம் துறந்தகாழ் முளைஅகைய,*
*நெய் பெய் தீம் பால் பெய்து இனிதுவளர்ப்ப*
*நும்மினும்சிறந்தது: நுவ்வைஆகும்* [1]

எனும் நற்றிணைப் பாடலில் 'நுவ்வை' தங்கை என்னும் பொருளில் வருகிறது. அவ்வை, ஆய், ஐயை முதலான சொற்கள் தாய் என்னும் பொருளிலேயே இலக்கியங்களில் ஆளப்பட்டு வருகிறது. இதுபோன்று திருக்குறளில்,

*அவ்வித்து அழுக்காறு உடையானைச் செய்யவள்*
*தவ்வையைக் காட்டி விடும்*[2]

பொறாமை உடையவனிடமிருந்து சீதேவியானவள் மனம் கோணி விலகித் தன்னுடைய அக்காளாகிய மூதேவியைக் கைகாட்டி விடுவாள் என்ற செய்தியும்,

*மடியுளான் மாமுகடி என்ப மடியிலான்*
*தாளுளாள் தாமரை யினாள்*[3]

செயலில் தளரும் சோம்பேறியிடம் மூதேவி குடியிருப்பாள்; தளராமல் உழைக்கும் முயற்சியாளனின் பாதத்தில் சீதேவி தங்கியிருப்பாள் என்ற செய்தியும் அமைந்திருப்பது இங்கு நினைவுகூரத்தக்கது.

*வேதாளம் சேருமே வெள்ளெருக்குப் பூக்குமே*
*பாதாள மூலிபடருமே - மூதேவி*
*சென்றிருந்து வாழ்வளே சேடன் குடிபுகுமே*
*மன்றோரம் சொன்னார் மனை* [4]

என்ற பாடலில் ஔவையும் தவ்வை, மாமுகடி. மூதேவி ஆகிய சொற்களை ஆக்கமில் பொருளில் பயன்படுத்தி உள்ளமைப் புலனாகின்றது. '*இருந்தகால் மூதேவி, நடந்தகால் சீதேவி*'என்ற பழமொழியும் வழக்கத்தில் இருப்பது குறிப்பிடத்தக்கது. மேலும், சிலப்பதிகாரத்தில்,

*விழுமந் தீர்த்தவிளக்குக் கொல்லென*
*ஐயையுந் தவ்வையும் விம்மிதம் எய்திக்*
*கண்கொள்ளாநமக் கிவர் காட்சியீங்கென்*[5]

எனும் வரிகளில் தவ்வை என்ற சொல்லை இளங்கோவடிகள் ஐயையின் தாயைக் குறிக்கவே பயன்படுத்துகிறார்.

**தவ்வை வழிபாட்டுத் தலங்களும் வழிபாடும்**

தவ்வை ஏழு கன்னியரில் ஒருத்தியாக பலகாலங்களாக வழிபடப்பட்டு வந்துள்ளாள்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018 Available at: www.ijtlls.com



இவளை குழந்தைப்பேறு வழங்கும் தெய்வமாக வணங்கும் முறையும் இருந்துள்ளது. சமணத்திலும், சாக்தத்திலும் (சக்திவழிபாடு), தவ்வை வழிபாடாகவே இருந்துள்ளது. தாய் தெய்வ வழிபாட்டிலும் இம்முறை இருந்துள்ளது. பல்லவர்களின் ஆட்சி காலமான 8ம் நூற்றாண்டில் தமிழர்களின் தெய்வமான தவ்வை வழிபடப்பட்டுள்ளாள். நந்திவர்ம பல்லவன் தவ்வையை குலதெய்வமாக வழிபாடு செய்துள்ளான். பிற்கால சோழர்களின் காலத்திலும் தவ்வைவழிபாடு இருந்துள்ளது. இன்றும் தஞ்சை, திருச்சி மாவட்டங்களில் வெகுவாகக் காணப்படுகிறது. தவ்வையைப் பயணத்தின்போது விபத்துக்கள் ஏற்படாமல் இருக்க வழிபடுகின்றனர். சோம்பலை நீக்கி சுறுசுறுப்பான வாழ்வைத் தர வழிபடுகின்றனர். குறிப்பிட்ட இனத்தவர் ஏகவேணி என்ற பெயரில் வழிபடுகின்றனர்.

- திருச்சி திருவானைக்காவல் அகிலாண்டேஸ்வரி கோயிலில் ஜேஸ்டாதேவிக்கு சிலையுண்டு.
- கும்பகோணம் கும்பேஸ்வரர் கோயிலில் மங்களாம்பிகை சன்னிதிக்கு வடமேற்கேயும், வெடால் ஆண்டவர் திருக்கோயில் தென் புறத்திலும், ஜேஸ்டாதேவியின் திருவுருவம் நல்ல கட்டமைப்புடன் கூடிய இடத்தில் உள்ளது.
- திருச்சி மாவட்டம் உய்யக்கொண்டான் மலை உஜ்ஜீவநாதர் (மார்க்கண்டேயருக்கு மீண்டும் ஜீவன் அளித்ததால் சிவபெருமானுக்கு இப்பெயர்) கோவிலில் ஜேஸ்டாதேவியின் சிலை வித்தியாசமான வடிவமைப்பில் உள்ளது.
- திருக்கொண்டீஸ்வரம் பசுபதீஸ்வரர் கோவிலில் ஜேஸ்டாதேவி அனுக்கிரக தேவதை.
- ஓரையூர் சிவன் கோவிலும், ஜேஸ்டாதேவிக்கு சிலை உண்டு.
- கடலூர் குளித்தலை கடம்பவனநாதர் கோயில் திருச்சுற்றில் உள்ளது,
- மோகனூர் அசலதீபேசுவரர் கோயில் சுற்றுச்சுவரில் தேவி சிலை பதியப்பட்டுள்ளது.
- திருமுக்கூடல் அகத்தீசுவரர் கோவில் திருச்சுற்றில் சிலை உள்ளது.
- பெரணமல்லூர் திருக்கரேசுவரர் கோயிலிலும் சிலையுள்ளது.

**தவ்வைவழிபாட்டின் எச்சங்கள்**

தவ்வை காக்கை கொடியினையும், கழுதை வாகனத்தையும் உடையவள். கைகளில் துடைப்பம் கொண்டுள்ளாள். தாய் தெய்வவழிபாடு பின்னாளில் மருவி மூதாதையர் வழிபாடாக மாற்றம் பெற்றிருக்கலாம். அதன் தொடர்ச்சியே இன்றும் காக்கைக்கு உணவிடும் பழக்கம் போலும். அதுமட்டுமல்லாது கழுதையின் படத்தோடு உள்ள'என்னைப் பார் யோகம் வரும்''துடைப்பத்தை லெட்சும்' என்று சொல்லும் வழக்கமும் உள்ளது. தவ்வை துரதிஸ்ட தேவதையாக இருப்பின் காக்கைக்கும், கழுதைக்கும் சமூகத்தில் உள்ள முக்கியத்துவம் சிந்திக்கதக்கது.


International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018 Available at: www.ijtlls.com



**நிறைவுரை**

அழுக்கு, நாற்றம், துன்பம், புலம்பல், அடிக்கடி கொட்டாவிவிடுதல், தலையை விரித்துப்போடுதல், அலங்கோலமாக இருத்தல், எதிர்மறையான எண்ணங்கள், தீராத மன கஷ்டம் இவையெல்லாம் மூதேவியின் அடையாளங்களாகக் கூறப்படுகிறது. ஈசனை அழிக்கும் தெய்வமாக ஏற்றுக் கொண்டது போல தீயவற்றை அழிக்கும் தெய்வமாக தவ்வையைப் போற்றுவதே சிறப்பு. காலப்போக்கில் பலமாற்றங்கள் ஏற்பட்டபோதிலும் தவ்வை வழிபாடு முழுவதும் வழக்கத்தில் அழிந்துவிடவில்லை. அவரவர் வீட்டில் உள்ள மூத்தபிள்ளையை ஜேஸ்டா என்பதன் மூலம் ஜேஸ்டாதேவிக்கு இருந்த முக்கியத்துவத்தையும்ஓரளவு உணரமுடிகிறது. கன்னியாகுமரி மாவட்டத்தில் வயல்வெளிகளில் தவ்வை சிலைகள் கிடைக்கப் பெற்றதாகக் கூறுகின்றனர். அப்படியானால் வளமை தெய்வமாக ஒருகாலத்தில் வழிபடப்பட்டிருக்கலாம். எது எப்படியானாலும் நம் வழிபாட்டிற்குரிய முதல்தேவி மூதேவியே என்ற அரிய செய்தி புலனாகின்றது.

**அடிகுறிப்புகள்**

1. நற் - பா.172
2. குறள் - 167
3. மேலது - 617
4. ஔவை, நல்வழி - பா.23
5. சிலம்பு, ம.கா - 51

**துணைநூற்பட்டியல்**

1. ஔவை சு. துரைச்சாமிப்பிள்ளை, முனைவர்.கதிர்முருகு - சங்க இலக்கியம் மூலமம் உரையும், நற்றிணை, சாரதா பதிப்பகம், சென்னை - 600014.
2. வ.சுப. மாணிக்கம் (உ.ஆ) - திருக்குறள், மணிவாசகர் பதிப்பகம், சென்னை - 600108.
3. புலியூர்கேசிகன் - சிலப்பதிகாரம் மூலமும் உரையும், சாரதா பதிப்பகம், சென்னை - 600014.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



# பட்டினப்பாலையில் வணிகச் செய்திகள்

திருமதி.சா.ரிஸ்வானா பர்வீன்,
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
மன்னர் திருமலை நாயக்கர் கல்லூரி,
பசுமலை, மதுரை-4.

உலகில் தொன்மைக் காலந்தொட்டு வாழும் தமிழனம் தனக்கென்று பல தனிச்சிறப்புகளை கொண்டதாக விளங்குகின்றது. காதலும், வீரமும் பழந்தமிழரின் பண்பாட்டை காட்டுவது போல அவர்கள் பல நாடுகளுடன் கொண்ட வணிகத் தொடர்பும் புகழ் வாய்ந்ததாகும். நாட்டு மக்களின் நல்வாழ்வுக்கும், நாகரிக வாழ்க்கைக்கும் வணிகம் முக்கிய காரணமாகும். இலக்கியங்களில் சங்க இலக்கியமானது சிறந்ததொரு இடத்தைப் பெறுகின்றது. எனவே சங்க இலக்கியங்களில் பத்துப்பாட்டில் ஒன்றான பட்டினப்பாலையில் உள்ள வணிகர் செய்திகளை வகைப்படுத்தி கூறுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**வணிகம் - விளக்கம்**

நாகரிகம் வளர வளர மக்களின் தேவைகளும் பெருகி வருகின்றன. எனவே அத்தேவைகளை நிறைவேற்றுவதற்கு பல வகைப் பொருள்களும், சேவைகளும் தேவைப்படுகின்றன. நுகர்வோர் ஆகிய நாம் நுகரும் பண்டங்கள் அனைத்தையும் தாமே உண்டாக்குவதில்லை. அதுபோல பண்டங்களை ஆக்குவோர் தாம் ஆக்கும் பண்டம் முழுவதையும் நாமே நுகர்வதில்லை. எனவே பெரும்பாலும் ஆக்குவோர் வேறு, நுகர்வோர் வேறு.

ஒரு நாட்டின் நன்மைக்கு உழவர், வணிகர், சான்றோர் என்னும் முத்திறத்தார் வேண்டப்படுகின்றனர் என்பது வள்ளுவரின் கருத்தாகும்.

*தள்ளாத விளையுளும் தக்காரும் தாழ்விலாச்*
*செல்வரும் சேர்வது நாடு*[1]

இக்குறளில், தாழ்விலாச் செல்வர் என்னும் தொடர் வணிகரைக் குறிப்பதாகும். நாட்டில் ஓரிடத்தில் உண்டாகும் பொருள்களை அவை உண்டாகாத பிற இடங்களுக்கு அனுப்புதலும், பல நாட்டுப் பண்டங்களை வருவித்து விற்றலும் உள்நாட்டு பண்டங்களை விற்றலும் வணிகர் தொழிலாகும். இத்தொழிலால் நாட்டில் செல்வம் மென்மேலும் வளரும் என்பது உறுதி. எனவே இவரைத் தாழ்விலாச் செல்வர் என்று திருவள்ளுவர் குறிப்பிடுகிறார்.

நவமணிகளை விற்ற வணிகர் முதல் பிட்டு, அப்பம் விற்ற வணிகர் வரை வணிகம் புரிந்து வந்த எல்லோரும் நடுவுநிலை தவறாது வணிகம் நடத்தினர். தாம் பொருளை வாங்கியதற்குக் கொடுத்த விலையையும் அப்பொருளை விற்பதால் தமக்கு வரும் இலாபத்தையும் வெளிப்படையாகக் கூறியே வணிகம் செய்தனர். இவர்களது இத்தகைய உயர் பண்பைப் பின்வரும் பட்டினப்பாலைப் பாடல் மூலம் அறியலாம்.

*நெடு நுகத்துப் பகல் போல*



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



*நடுவு நின்ற நல்நெஞ்சினோர்*
*வடு அஞ்சி வாய் மொழிந்து*
*தமவும் பிறவும் ஒப்பநாடி*
*கொள்வதூஉம் மிகை கொளாது*
*கொடுப்பதூஉம் குறைகொடாஅது,*
*பல்பண்டம் பகர்ந்து வீசும்*
*தொல்கொண்டித் துவன்றிருக்கை* [2]

**பட்டினத்தின் சிறப்பு:**

பட்டினம், காவிரிபூம்பட்டினம் இது சோழநாட்டின் பழம்பெரும் நகரம் ஆகும். இதன் தலைநகரம் துறைமுகப் பட்டினம் ஆகும். இது சென்னை மாகாணத்தில், தஞ்சை வட்டாரத்தின் கீழ்க்கோடியிலே காவிரி நதி கடலோடு கலக்கும் இடத்தில் உள்ளது. ஐம்பெரும் காப்பியங்களில் ஒன்றான மணிமேகலையில் விழாவறை காதையில் காவிரிபூம்பட்டினம் பழம்பெரும் நகரம் என்றும் அவ்வூர் மேன்மக்கள் நல்லொழுக்கத்திலிருந்து வழுவார். எனவே, அதன் பெருமை மேலோங்கி உயர்ந்தது. அதன் சிறப்பை பலநாட்டாரும் போற்றிப் போற்றிப் புகழ்ந்தனர் என்று கீழ்க்கண்ட பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

*உலகம் திரியா, ஓங்குஉயர் விழுச்சீர்ப்*
*பலர்புகழ் மூதூர்ப் பண்புமேம் படீஇய*
*ஓங்குஉயர் மலயத்து அருந்தவன் உரப்பத்* [3]

காவிரிபூம்பட்டினம் பெரிய கப்பல்களுக்கும் சிறந்த துறைமுகமாக விளங்கியது. சரக்குகளையும் பாயினையும் இறக்காமலேயே அத்துறைமுகத்தில் கப்பல்கள் நுழைய முடியும். அப்படியும் அவை நிலையாயும் தளராதும் காப்புடனும் நின்றன என புறநானூற்றுப் பாடல் உணர்த்துகிறது.

*மீப் பாய் களையாது மிசைப் பரம் தோண்டாது,*
*புகாஅர்ப் புகுந்த பெருங் கலம் தகாஅர்*
*இடைப் புலப்பெரு வழிச் சொரியும்*
*கடற் பல் தாரத்த நாடு கிழவாயோ* [4]

பரதவர் வாழிடங்களுகக்கு அருகில் கடற்கரையில் பண்டங்களைச் சேகரிக்கப் பண்டகசாலைகள் கட்டப்பெற்றன. அளந்து கணக்கிட முடியாத பல பண்டங்கள் எல்லை காணமுடியாதபடி வந்து நிறைந்தன சிறந்த பாதுகாப்பும் அநேக காவற்காரர்களையும் உடைய சுங்கச் சாவடியில் என்று கடியலூர் உருத்திரங் கண்ணனார் பட்டினப் பாலையில் கூறுகிறார்.

*அளந்தறியாப் பல பண்டம்*
*வரம்பறியாமை வந்தீண்டி*
*அரும்கடிப் பெரும்காப்பின்* [5]



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



**காவிரியின் பெருமை**

சோழநாட்டின் சிறப்பிற்குக் காரணம் காவிரி ஆறுதான். காவிரி நாடு காண்பதே சோழ நாட்டிற்கு ஒரு பெயர் ஆகும். 'காவிரி புரக்கும் நாடு' என்பது புலவர் புகழ்மொழி. காவிரிக்குப் 'பொன்னி' என்பது ஒரு பெயர். காவிரியாற்று மணலிலே பொன் மின்னுவதை இன்னும் காணலாம். பொன்னி பாயும் நாட்டுக்குப் பொன்னி நாடு என்று பெயர். *'பொன்னியின் செல்வன், காவிரி புரக்கும் நாடு கிழவோன்'* என்பவை சோழனைக் குறிக்கும் பெயர்கள் ஆகும்.

காவிரி பாயாவிட்டால் சோணாட்டிற்குச் சிறப்பில்லை. 'சோணாடு சோறுடைத்து' என்று புகழ் பெற முடியாது.

வெள்ளியென்னும் நட்சத்திரம் கீழ்த்திசையிலிருந்து மேற்கு திசைக்கு செல்லும் இயல்புடையது. இது தன் இயல்பு மாறி, திசைகெட்டு வடக்கேயிருந்து தெற்கே போகுமானால் மழை பெய்யாது. வானம் வறண்டு போகும். மழை பெய்யாவிட்டால் மழைத்துளியை உணவாகக் கொள்ளும் வானம்பாடிக் புள்ளும் வாட்டமடையும், பாடாது ஒழியும். இத்தகைய வானம் பொழியாத வறட்சிக் காலத்திலும் காவிரியாறு நீர் வற்றாது. மேற்றிசைக் குடகு மலையிலே பிறந்து கீழ்த்திசைக் கடலிலே பாயும். அந்தக் காவிரியின் நீர் சோழ நாடெங்கும் பரவி வயல்களிலே பாய்ந்து அங்கே பொன்னைக் குவிக்கும் என்று பட்டினப்பாலை கூறுகிறது.

*வசையில் புகழ் வயக்கு வெண் மீன்*
*திசை திரிந்து தெற்கு ஏகினும்*
*தற் பாடிய தளி யுணவின்*
*பள் தேட்பப் பயுல் மாறி*
*வான் பொய்ப்பினும், தான் பொய்யான்*
*மலைத் தலைய கடற் காவிரி*
*புனல் பரந்து பொன் கொழிக்கும்*[6]

இதனால் காவிரியாறு என்றும் வற்றாத நீர்ப்பெருக்குடைய ஜீவநதி என்பதையும், சுக்கிரன் என்னும் கிரகம் திசை மாறினால் மழை பொய்யாது என்பது பண்டை வான்நூலார் கொள்கை என்பதையும் அறியலாம். பண்டைத் தமிழர்கள் வானநூல் அறிந்தவர்கள் என்பதையும் இதன் மூலம் அறிய முடிகிறது.

**சோழநாட்டின் செல்வ வளம்**

சோழ நாட்டிலே விளைந்து கொண்டிருக்கின்ற பரந்த வயல்கள் இருக்கின்றன. அங்கே கருப்பஞ்சாற்றைக் காய்ச்சுவதனால் வாசனை வீசுகின்ற கரும்பாலைக் களத்தில் உள்ள கொட்டில்களிலிருந்து வரும் தீயின் சூட்டினால் அழகு கெட்டு நீர் நிறைந்த வயல்களில் உள்ள நீண்ட நெய்தல் மலர்கள் வாடும். அவ்விடத்திலே விளைந்திருக்கும் செந்நெற்கதிர்களை மேயும் பெரிய வயிற்றையுடைய எருமை, எருமையின் முதிர்ந்த கன்றுகள்


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018 Available at: www.ijtlls.com



நெற்கூட்டின் நிழல்களில் தூங்கிக் கொண்டு இருக்கும். குலைகளைக் கொண்டிருக்கும் தென்னை மரங்களையும், தாறு போட்டிருக்கும் வாழைகளையும், காய்ந்திருக்கும் பாக்கு மரங்களையும் வாசனை வீசும் மஞ்சட் செடிகளையும், பல வகையான மாமரங்களையும், கொத்தாகக் காய்த்திருக்கும் பனை மரங்களையும், அடியிலே கிழங்கையுடைய சேப்பஞ் செடிகளையும், முளைத்திருக்கும் இஞ்சிச் செடிகளையும் அங்கே காணலாம் என்று பட்டினப்பாலை உணர்த்துகின்றது.

*விளைவு அறா வியன் கழனிக்*
*கார்க் கரும்பின் கமழ் ஆலைத்*
*தீத் தெறுவில் கவின் வாடி*
*நீர்ச் செறுவின் நீள் நெய்தல்*
*பூச் சாம்பும் புலத்து ஆங்கண்*
*காய்ச் செந்நெல் கதிர் அருந்தும்*
*மோட்டெருமை முழுக் குழுவி*
*கூட்டு நிழல் துயில் வதியும்*
*கோட்டெங்கின் குலை வாழைக்*
*காய்க் கமுகின் கமழ் மஞ்சள்*
*முதற் சேம்பின் முளை யிஞ்சி*

செல்வத்திலே சிறந்து விளங்கிய பலர் கடற்கரையோரத்தில் பெரிய வீடுகளைக் கட்டிக் கொண்டு வாழ்கிறார்கள். இந்தப் பாக்கங்கள் எல்லாம் காவிரிபூம்பட்டினத்தைச் சேர்ந்தவை ஆகும். இந்தப் பாக்களின் இயல்பையும் அங்கு வாழ்கின்ற மக்களின் செல்வ சிறப்பினைப் பற்றியும் பட்டினப்பாலை ஆசிரியர் கூறுகிறார்.

பெரிய வீடுகள் அந்த வீடுகளின் முற்றங்களிலே நெல் முதலிய உணவுப் பொருள்கள் காய வைக்கப்பட்டிருக்கின்றன. அந்த உணவுப் பொருள்களைப் பறவைகள், விலங்குகள் முதலியன சேதப்படுத்தாமல் இளம் பெண்கள் காவல் காத்துக் கொண்டிருக்கின்றனர். அந்தப் பெண்கள் அழகான நெற்றியையும், கள்ளம் கபடமற்ற பார்வையையும் உடையவர்கள் என்றும் சிறந்த பொன் ஆபரணங்களையும் அணிந்திருக்கின்றனர் என்றும் கூறுகிறார்.

கோழிகள், காய்ந்து கொண்டிருக்கும் உணவுப் பொருள்களைக் கொத்தித் தின்ன வருகின்றன. அதுகண்ட சிறுமிகள் அக்கோழிகளை அதட்டி விரட்டுகின்றனர். அவர்களின் அதட்டலுக்கு அவைகள் அஞ்சாமல் உணவுப் பொருள்களை கொத்தித் கொத்தி உண்ணுகின்றன. உடனே அச்சிறுமிகள் தங்கள் காதிலே அணிந்திருக்கும் “கொடுங்குழை” என்னும் காதணிகளைக் கழற்றி அக்கோழிகளின் மேல் வீசியெறிந்து விரட்டுகின்றனர். இவ்வாறு கோழிகளை விரட்டுவதற்காக வீசியெறியப்பட்ட பொற்குழைகள் வீடுகளின் முற்றங்களிலே குவிந்து கிடக்கின்றன.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018 Available at: www.ijtlls.com



அந்த முற்றங்களிலே சிறுவர்கள் சிறுதேர் உருட்டி விளையாடுகின்றனர். அந்தச் சிறு தேர்கள் மூன்று சக்கரங்களை உடையவை. குதிரை பூட்டப்படாத தேர்கள் அவை. இக்காலத்தில் சிறுவர்கள் நடை பழகுவதற்காகச் செய்து கொடுக்கும் நடை வண்டி போன்றன. சிறுவர்கள் ஓட்டி விளையாடும் இந்தச் சிறு தேர்களை ஓடவிடாமல் அங்கே குவிந்து கிடக்கின்றன காதணிகள் - அதாவது பொற்குழைகள் தடுக்கின்றன. இப்படிச் சிறுவர்களின் சிறு தேர் ஓட்டத்தைத் தடுக்கும் பகை ஒன்றுதான் அங்கு உண்டு. அங்கு வாழ்கின்றவர் வேறு எந்தப் பகையையும அறியாதவர்கள். அவர்கள் மனங் கலங்குவதற்கான தீமைகள் எதுவுமே அங்கில்லை. இத்தகைய செல்வம் நிறைந்த பல குடும்பத்தினர் வாழ்கின்ற செழிப்புள்ள நாடாகத் திகழ்கிறது சோழநாடு என்று கூறுகிறார் ஆசிரியர் கடியலூர் உருத்திரங்கண்ணனார்.

*அகனகர் வியன் முற்றத்துச்*
*சுடர்நுதல் மட நோக்கின்*
*நேர் இழைமகளிர், உணங்குஉணாக் கவரும்*
*கோழி யெறிந்த கொடுங்கால் கனக்குழை,*
*பொற்கால் புதல்வர் புரவியின்று உருட்டும்*
*முக்கால் சிறுதேர் முன் வழி விலக்கும்* [8]

இதனால் சோழநாட்டிலே பல செல்வக் குடியினர் வாழ்ந்தனர் என்பதை அறியலாம்.

**சுங்கம்**

வெளியிலிருந்து நகருக்குள் வரும் பண்டங்களுக்கு வரி வாங்கும் வழக்கம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தமிழ்நாட்டில் இருந்தது. தரை வழியாக வரும் பொருள்களுக்கும் வரி வாங்கினர். கடல் மார்க்கமாக வந்து இறக்குமதியாகும் பண்டங்களுக்கும் வரி வாங்கினார்கள்.

உல்கு என்பது வரி. அதனையே பின்னாளில் சுங்கம் என வழங்கினர். அரசனுடைய ஆட்களே சுங்கம் வாங்குவார்கள். காவிரிபூம்பட்டினத்துக் கடல் துறையிலே இறங்கும் பண்டங்களுக்கும் சுங்க வரியுண்டு. ஏற்றுமதி செய்யப்படும் பண்டங்களுக்கும் சுங்க வரியுண்டு. நிலத்திலிருந்து வந்த பண்டங்களும், நீர் வழியாக வந்த பண்டங்களும் முதலில் சுங்கச் சாவடிக்குள் அனுப்பப்படும்.

அவைகள் சுங்க அதிகாரிகளால் பரிசோதிக்கப்படும் பரிசோதிக்கப்பட்டதற்கு அடையாளமாகச் சோழனுடைய புலி முத்திரையிடப்படும். பண்டத்தினை நிறைக்கும் அளவுக்கும் ஏற்ப வரி வாங்கப்படும்.

பிறநாடுகளிலிருந்து கடல் மார்க்கமாக வந்த பண்டங்களை நிலத்திலே இறக்கவும், உள்நாட்டிலிருந்து தரைமார்க்கமாக வந்த பண்டங்களைப் பிறநாடுகளுக்கு அனுப்புவதற்காகக் கடலில் உள்ள கப்பல்களில் ஏற்றவும் அளவற்ற பண்டங்கள் வந்து குவிந்து கிடக்கின்றன. அவைகள் எல்லையில்லாமல் வந்து நிறைந்து கிடக்கின்றன. நல்ல பாதுகாப்பையும் சிறந்த



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018 Available at: www.ijtlls.com



காவலையும் உடைய சுங்கச் சாவடியிலே அவைகளின் மேல் புலி முத்திரை பொறித்து வெளியிலே அனுப்புகின்றனர்.

*வலியுடை வல் அணங்கினோன்*
*புலிபொறித்துப் புறம்போக்கி* [9]

இதன்மூலம் சுங்கவரி விதிக்கப்பட்டு வந்ததைக் காணலாம். பண்டங்கள் பாழடையாமலும், திருட்டுப் போகாமலும் சுங்கச் சாவடியிலே பாதுகாக்கப்பட்டன.

மேலும், இறையாகத் தான் வந்த பொருளும், வரியாக வந்த பொருளும் பகையரசர் காட்டும் திசைப் பொருளும் அரசனுக்குரிய பொருட்கள் ஆகும் என்று வள்ளுவர் கூறுகிறார்.

*உறுபொருளும் உல்கு பொருளுறும்தன் ஒன்னார்த்*
*தெறுபொருளும் வேந்தன் பொருள்* [10]

**உண்மை ஊழியர்கள்**

சுங்கம் வசூலிக்கும் ஆட்களே உண்மை ஊழியர்கள் என அழைக்கப்பட்டனர். அவர்கள் நடுநிலையிலிருந்து சுங்கம் வாங்குவார்கள். கையுறை (லஞ்சம்) வாங்கமாட்டார்கள். தங்களுடைய வேலைகளைச் சுறுசுறுப்பாகச் செய்வார்கள். அவர்களை யாரும் ஏமாற்றிவிட முடியாது.

சுங்கம் வாங்குவோர் நள்ளிரவிலே, காவிரியாற்று வெள்ளம் குவிந்திருக்கும் மணல் மேட்டிலே உறங்குவார்கள். பண்டகசாலையிலே பண்டங்கள் குவிந்திருக்கும் அப்பண்டங்களைப் பிறர் கவராமல் பாதுகாப்பதிலே அவர்கள் வல்லவர்கள், புகழ் பெற்றவர்கள். அந்த ஊழியர்கள் கதிரவன் தேரிற்பூட்டிய குதிரைகள் போல அயராது சுற்றி வருவார்கள். ஒரு நொடி நேரங்கூடச் சோர்ந்திருக்கமாட்டார்கள். சளைக்காமல் வாங்க வேண்டிய சுங்கங்களை வாங்கிக் கொண்டேயிருப்பார்கள் என்பதை பட்டினப்பாலையின் இப்பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

*மா அகாவிரி மணம் கூட்டும்*
*தூஉ எக்கர்த் துயில் மடிந்து*
*வால் இணர் மடல் தாழை*
*வேல் ஆழி வியன் தெருவில்*
*நல்லிறைவன் பொருள் காக்கும்*
*தொல்லிசைத் தொழில் மாக்கள்*
*காய் சினத்த கதிர்ச் செல்வன்*
*தேர் பூண்ட மாஅ போல*
*வைகல் தொறும் அசைவின்றி*
*உல்கு செய ......* [11]

**குவிந்திருக்கும் பண்டங்கள்**

காவிரிபூம்பட்டினத்துத் தெருக்களிலே பல செல்வங்கள் குவிந்து கிடக்கின்றன. பல


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018

Available at: www.ijtlls.com

நாட்டிலிருந்து வந்த பண்டங்கள் நிறைந்து கிடைக்கின்றன. குதிரைகள் ஏராளமாகக் கட்டப்பட்டிருக்கின்றன. அவைகள் மிகச் சிறந்த குதிரைகள், விரைவாக நிமிர்ந்து ஓடக்கூடியன. வெளிநாடுகளிலிருந்து கடல் வழியாக வந்தவை. தரை மார்க்கமாக வண்டிகளிலே ஏற்றிக் கொண்டு வந்த மிளகு மூட்டைகள் ஏராளமாகக் குவிந்து கிடக்கின்றன.

பல திறப்பட்ட இரத்தினங்களும், பொன் கட்டிகளும் சேர்த்து வைக்கப்பட்டிருக்கின்றன. இவைகள் இமயமலை போன்ற வடநாட்டு மலைகளிலிருந்து கொண்டு வரப்பட்டவை. குடகு மலையிலிருந்து சந்தனக் கட்டைகளும் அகிற்கட்டைகளும் கொண்டு வந்து குவிக்கப்பட்டிருக்கின்றன. பாண்டி நாட்டுத் தென் கடலிலே மூழ்கி எடுத்த சிறந்த முத்துக் குவியல்கள் காணப்படுகின்றன. கீழைக் கடலிலே பிறந்த பவளங்களும் அங்கே காணப்படுகின்றன.

கங்கை நதி பாயும் வட்டாரங்களிலே விளைந்த செல்வங்களும், காவிரியாறு பாயும் பகுதிகளிலே விளைந்த செல்வங்களும் அங்கே நிறைந்து கிடக்கின்றன. இலங்கைத் தீவிலே உண்டான உணவுப் பொருள்கள் ஏராளமாக வந்து குவிந்து கிடக்கின்றன. ‘காழகத் தீவு’ என்று பெயர் பெற்ற பர்மாவிலிருந்து பல செல்வப் பொருள்கள் வந்து குவிந்து கிடக்கின்றன. அவைகள் எல்லாம் இன்ப வாழ்வுக்கேற்ற சிறந்த செல்வப் பொருள்கள் ஆகும்.

இவைகளைத் தவிர இன்னும் பல சிறந்த பண்டங்களும் குவிந்து கிடக்கின்றன. இத்தகைய பல செல்வங்களுடன் சிறந்து விளங்கின. காவிரிபூம்பட்டினத்துத் தெருக்கள் என்பதை கீழ்க்கண்ட பட்டினப்பாலை பாடல் உணர்த்துகிறது.

*செழுநகர் வரைப்பின்*
*செல்லா நல்லிசை அமரர் காப்பின்*
*நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்,*
*காலின் வந்த கருங்கறி மூடையும்,*
*வடமலைப் பிறந்த வாரமும், அகிலும்*
*தென்கடல் முத்தும், குணகடல் துகிரும்,*
*கங்கை வாரியும், காவிரிப் பயனும்,*
*ஈழத்து உணவும், காழகத்து ஆக்கமும்,*
*அரியவும் பெரியவும் நெரிய ஈண்டி,*
*வளம் தலை மயங்கிய நனம்தலை மறுகின்* [12]

**வணிக மனைகள்**

கடைத் தெருவுக்கு ஆவணம் என்று ஒரு பெயர். அங்காடி என்பது மற்றொரு பெயர். ஆவணம் அல்லது அங்காடி என்பது பண்டங்களை வைத்துச் சில்லறையாக வணிகம் செய்யும் இடமாகும்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



கடை வீதிகளிலே வணிகர்கள் பலர் குடியிருப்பதையும் அங்கேயே வணிகம் செய்வதையும் காண்கிறோம். பெரிய வியாபாரிகள் தான் குடியிருப்பும் வணிகம் செய்யும் கடையும் ஒரே இடத்தில் அமைத்துக் கொள்ள முடியும்.

இன்றும் பெரிய நகரங்களில் உள்ள கடை வீதிகளிலே சுற்றுக் கட்டமைந்த பெரிய கட்டடங்கள் இருக்கின்றன. அக்கட்டடங்கள் வானுயர்ந்த மாடிகளாகவும் அமைந்துள்ளன. இத்தகைய மாடிக் கட்டிடங்களிலே கீழ்க்கட்டிடங்களை வணிக மனைகளாகப் பயன்படுத்துகின்றனர். மேலே குடியிருந்தும் வருகின்றனர். இவ்வாறு காவிரி பூம்பட்டினத்தின் கடைத்தெருவில் வணிகர்கள் குடியிருந்தனர்,

காவிரிபூம் பட்டினத்திலே பெரிய பெரிய மாளிகைகள் இருந்தன. செல்வம் படைத்தவர்கள் இருந்தனர். பெண்கள் அணிகலன்களையும், மெல்லிய ஆடைகளையும் அணிந்திருந்தனர். இடைவிடாமல் திருவிழாக்கள் நடைபெற்றுக் கொண்டே இருந்தன என்பதை அறியலாம். இன்றுள்ள பெரிய நகரங்களின் கடைவீதிகளை போலவே இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே காவிரிபூம்பட்டினத்துக் கடைவீதி காட்சியளித்தது என்பதை அறியமுடிகிறது.

**தொகுப்புரை**

பட்டினப்பாலையில் வணிகச் செய்திகள் என்ற இக்கட்டுரையில் சோழநாட்டின் பழம்பெரும் நகரான காவிரிப்பூம் பட்டினத்தின் சிறப்பு பற்றியும், சோழநாட்டின் சிறப்பிற்கு காரணமான காவிரியாற்றின் சிறப்பு பற்றியும், வணிக மனைகள், உண்மை ஊழியர்கள், கடைவீதிகள், அங்கு குவிந்திருக்கும் பண்டங்கள் ஆகியவற்றை இக்கட்டுரை நமக்கு தெளிவுற உணர்த்துகின்றது.

**அடிக்குறிப்புகள்**

1. குறள் 731
2. பட்டினப்பாலை 206-212
3. மணிமேகலை:விழாவறை காதை 1-3
4. புறநானூறு 30:12-15
5. பட்டினப்பாலை 131-133
6. மேலது 1-7
7. மேலது 8-18
8. மேலது 20-25
9. மேலது 134-135
10. குறள் 756
11. பட்டினப்பாலை 116-125
12. மேலது 183-192



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018 Available at: www.ijtlls.com



**துணைநூற்பட்டியல்**

1. வ.சுப. மாணிக்கம் (உ.ஆ) - திருக்குறள், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, மறுபதிப்பு-2000.

2. ஔவை சு. துரைச்சாமிப்பிள்ளை, முனைவர்.கதிர்முருகு - சங்க இலக்கியம் மூலமம் உரையும், பத்துப்பாட்டு-பட்டினப்பாலை, சாரதா பதிப்பகம், சென்னை - 600014.

3. புலமை. வேங்கடாசலம் (உ.ஆ) - மணிமேகலை, பாவை பப்ளிகேசன்ஸ், சென்னை - 600014, முதல்பதிப்பு - 2017.

4. உ.வே. சாமிநாதையர் - புறநானூறு மூலமும் உரையும், உ.வே.சா.பதிப்பு, சென்னை, ஆறாம் பதிப்பு - 1963.


International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



# அன்னி மிஞிலி

**முனைவர் லி. ஜன்னத்,**
**உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,**
**செந்தாமரை கலை அறிவியல் கல்லூரி,**
**மதுரை.**

சங்க இலக்கியம் பழந்தமிழரின் வாழ்வியலை எடுத்துக் கூறுகிறது. அதை அகம், புறம் எனப் பகுப்பர். அக இலக்கியமான அகநானூற்றில் வரலாற்றுக் குறிப்புகள் இடம்பெற்றுள்ளன. அதில் மூவேந்தர்கள், குறுநில மன்னர்கள் பற்றிய செய்திகளும் காணப்படுகின்றது. அந்த வகையில் 'அன்னி மிஞிலி' என்னும் பெண் போராளியைப் பற்றியும் இயம்புகிறது. அன்னி மிஞிலியின் வீரத்தைக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**கோசர்கள்**

சங்க காலத்தில் கோசர் என்னும் கூட்டத்தார் தமிழகத்தில் ஆட்சி செய்தனர். நீதி என்னும் பெயரில் மக்களுக்குக் கொடுந் தண்டனை விதித்து வந்தனர். இதனை,

*கோசரென்னும் கூட்டத்தார்*
*தமிழ கத்தில்*
*கொடிகட்டி ஆண்டார்கள்*
*ஒருகா லத்தே...*
*பேசுவதில் மெய்ம்மையன்றிப்*
*பிறிது பேசார்-*
*பெருநீதிக்கு அவர்களுக்கன்று*
*ஈடே இல்லை!*[1]

என்றும்,

*கடிதோச்சி மிகமெதுவே*
*எறிக' என்னும்*
*கலைநுணுக்க அரசியலை*
*அறியாக் கோசர்*
*"அடிபோட்டால் சரியாகும்*
*எல்லாம்" என்னும்*
*அச்சநெறி உச்சிமிசை*
*ஏறி னார்கள்...*[2]

என்றும் கோசர்களின் கொடுங்கோன்மையைப் பாடுகிறார் சாலையார்.



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Vol. 1: Issue 1, July-2018
Available at: www.ijtlls.com



**அன்னிமிஞிலி**

அன்னி மிஞிலி என்னும் பெண் ஆயர் குலத்தைச் சேர்ந்தவள். கோசர்களின் கொடுமைக்கு எதிராகப் போராடிய பெண் போராளியாவாள். '*அன்னி' என்பது ஒரு வீரன் பெயர்; 'மிஞிலி' என்பது மற்றொரு வீரனின் பெயர்; இவ்விரு பெருவீரர்கட்குரிய பெயர்களைத் தாங்கி நின்றாள் அன்னி மிஞிலி எனும் பெயருடை இந் நல்லாள். அன்னி மிஞிலியின் வரலாறு உணர்ந்தார் அவளோர் உயர்குணக் குலக்கொடியாளாவள் என்பதை உணர்வர். தனக்குத் தவறு செய்தாரைத் தண்டிக்கத் தவறாத தறுகண்மை யுடையாள் அன்னி மிஞிலி* [3]என்று அன்னிமிஞிலியின் தட்டிக் கேட்கும் திறனைக் கூறுகிறார் கா.கோவிந்தன்.

**கோசர்கள் அளித்த தண்டனை**

அன்னிமிஞிலியின் தந்தை வளர்த்து வந்த மாடுகள் கோசர்களின் பயிரை நாசம் செய்துவிட்டது. இதனால் அம்முதியவரின் கண்களைப் பறிக்க ஆணையிட்டனர் கோசர்கள். இதனை,*ஒரு சமயம் இவள் தந்தையின் மாடுகள், அக்காலத்தில் வாழ்ந்த கோசர் என்னும் கூட்டத்தாருக்குச் சொந்தமான பயிற்று விளையில் புகுந்து பயிரை அழித்துவிட்டன. அதை அறிந்த கோசர்கள் அவரை அழைத்துக் கேட்டனர். அவரும் தெரியாமல் நிகழ்ந்து விட்ட அந்தத் தவற்றை ஒப்புக்கொண்டார். கோசர்கள் அவருக்கு அபராதமாக யாதும் விதிக்காமல், அல்லது இழப்பீடு(நட்ட ஈடு) தருமாறு கூறாமல், "நீ பாராமல் இருந்ததால் தானே உன் மாடு பயிற்றை மேய்ந்தது?" என்று அவருடைய கண்கள் இரண்டையும் பிடுங்கிவிட்டார்கள்!*[4] என்கின்றனர் சாலையார் - சாலினியார்.

தண்டனையைக் கேட்டு அதிர்ந்த அன்னிமிஞிலி, 'கண் பார்க்க வேண்டும்' என்று அவர்கள் காலில் விழுந்து வேண்டினாள். கோசர்கள் கேட்காமல் தண்டனையை நிறைவேற்றினர். அழுது கொண்டே, கோழையாய் போனீர்களா? என்று தமிழ் மக்களிடம் கேட்டாள். தன் தந்தைக்கு ஏற்பட்ட இந்தக் கொடுமைக்கு வஞ்சம் தீர்த்துக் கொள்ள எண்ணினாள். இவ்வரலாற்றுச் செய்தியை,

*முதைபடு பசுங்காட்டு அரில்பவர் மயக்கிப்*
*பகடுபல பூண்ட உழவுறு செஞ்செய்*
*இடுமுறை நிரம்பி ஆகுவினைக் கலித்துப்*
*பாசிலை அமன்ற பயறுஆ புக்கென*
*வாய்மொழித் தந்தையைக் கண்களைந் தருளாது*
*ஊர்முது கோசர் நவைத்த சிறுமையிற்*
*கலத்து முண்ணாள் வாலிது முடாஅள்*
*சினத்திற் கொண்ட படிவம் மாறாள்*
*மறங்கெழு தானைக் கொற்றக் குறும்பியன்*

